உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.




# திருக்கச்சூர்
# ஆலக்கோயில் தோத்திரமஞ்சரி.



வித்துவான்-பிரசங்காமிர்தம்
திருக்கச்சூர்
**பா. வேலுதேசிகர் அவர்களால்**
பார்வையிடப்பட்டு,

ஷை தேவஸ்தானம்
ஆதீன பரம்பரைத் தர்மகர்த்தர்
வே. அப்பாவுபிள்ளை குமாரர்
தி. வெ. வெங்கடாசலப்பிள்ளையவர்களால்

சென்னை:
மதராஸ் டைமண்டு பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.
ஆனந்த ௵
1915

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.




# திருக்கச்சூர்
# ஆலக்கோயில் தோத்திரமஞ்சரி.





வித்துவான்-பிரசங்காமிர்தம்

திருக்கச்சூர்

பா. வேலுதேசிகர் அவர்களால்

பார்வையிடப்பட்டு,

ஷ தேவஸ்தானம்

ஆதீன பரம்பரைத் தர்மகர்த்தர்

வே அப்பாவுபிள்ளை குமாரர்

தி. வெ. வெங்கடாசலப்பிள்ளை யவர்களால்

சென்னை:

மத்ராஸ் டைமண்டு பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

ஆனந்த௵

1915.




# முகவுரை.

தொண்டைநாட்டின்கண் சிறந்தோங்கும் சைவசமயகுரவர்களால் தேவாரப்பதிகம் பெற்ற சிவதலங்கள் முப்பத்திரண்டனுள் ஒன்றாயும், ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு சிவபெருமான் அன்னமேற்று வந்தளித்த பதியாயும், இன்னும் அநேக மகிமைகளை யுடையதாயும் விளங்கும் திருக்கச்சூரின்கண் ஸ்ரீ அந்தகார நிவாரணிசமேதராய் ஔஷதகிரீஸ்வரர் எழுந்தருளியிருக்கும் ஆலக்கோயிலுக்கும், ஸ்ரீ அஞ்சனாட்சி சமேதராம் கச்சபேச்சுரர் அமுதத்தியாகேசர் எழுந்தருளி யிருக்கும் தாழக்கோயிலுக்கும் ஆதீனபரம்பரைத் தர்மகர்த்தர்களாய் விளங்கிய அடியிற்கண்ட எங்கள் பெரியோர்களால், அவ் வக்காலங்களில் கல்விப்புலமை நிறைந்த பலவித்துவ சிரோமணிகளைக் கொண்டு இயற்றப்பட்ட, ஸ்ரீ மருந்தீசர் பதிகமாதி மங்களம் ஈறாகிய பிரபந்தங்கள்முப்பத்துநான்கும்ஒன்றற்கொன்றுசம்பந்தமில்லாமல் பல படப்பரந்தனவாயும்,அநேக நாளாய்கையெழுத்து மூலமாகியே வந்தமையால் பிழைகள் மலியப் பெற்றனவாயு மிருந்தமையால் அவைகளை வித்வான், ஆ. ச. குமாரவடிவேற் பிள்ளையவர்கள் ஒருவாறு பார்வையிட்டனர். பிறகு வித்வான் பிரசங்காமிர்தம் திருக்கச்சூர் பா. வேலு தேசிகர் அவர்கள் ஷை பிரபந்தங்களை வகுத்துப் பிரதிகளை ஒருவாறு பிழையறப் பரிசோதித்து எழுதி, **திருக்கச்சூர் ஆலக்கோயில் தோத்திரமஞ்சரி** என்னு மகுடமாந்திருப் பெயர் புனைந்துதர அச்சிடுவித்தனன். இவற்றில் சில பிரபந்தங்கள் சிற்சில இடங்களில் சொற் பொருத்தம் பொருட் பொருத்தமில்லாதனவே யாயினும், பெரியோர்கள் வாக்கானதால் அன்பர்கள் க்ஷமிக்க.



பாராளவந்த துரைவேங்கடாத்திரிக்குப்பாலரைவர்
பேரானவெங்கட்டநரசுகெம்பீரன்பின்வெங்கட்ட
நாராயணன்றுணைவெங்கட்டராமநரேந்திரன்பின்
காரானவேங்கடகிருஷ்ணன்பின்வெங்கட்டரங்கன்றானே,

இச்செய்யுளிற் கண்டடி வெண்டலூர் வெங்கடாத்திரி பிள்ளையவர்கள் குமாரர்கள் ஐவரில், ஜேஷ்டகுமாரர் வெங்கட்டநரசுபிள்ளை, இவர்குமாரர் சேஷாத்திரிபிள்ளை என்னும் குட்டியப்பாபிள்ளை, இவர்குமாரர் அப்பாவுபிள்ளை, இவர்குமாரனாகிய அன்பன்.

**தி. வெ. வெங்கடாசல பிள்ளை,**

ஷை தேவஸ்தான ஆதீன பரம்பரைத் தர்மகர்த்தர்.



திருக்கச்சூரில் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு சிவபிரான் அக்ராரத்தில் அன்னபிட்சையேற்றுவந்து அளித்தது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கச்சூர்

# ஆலக்கோயில் தோத்திரமஞ்சரி.

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## தரிசனத்திற்கு வந்தருளிய சரித்திரம்.

ஸ்ரீ அகண்ட சச்சிதானந்த கனிபூதராகிய சிவபெருமானது திருமேனியின் பிரதி பிம்பமாஞ் சொருபத்தை யுடையவராய், நமது சைவ சமயத்துக்குப் பரமாசாரிய மூர்த்திகளில் ஒருவராய் விளங்கும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரத்தை அறியாத சைவர்கள் ஒருவருமிலர்.

அவ்வாசாரிய சுவாமிகள் சிவ்பெருமான் றமக்கிட்ட கட்டளைப்படி சிவ க்ஷேத்திர யாத்திரை செய்வான் "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடுசான்றோருடைத்து" எனப் பூலோகசரஸ்வதியாகிய தெய்வப்புலமை மிக்க நமது ஔவைப் பிராட்டியாரால் புகழ்ந் துரைக்கத்தக்க பெருமைவாய்ந்த தொண்டைநாட்டை யடைந்து அநேக அற்புத மகிமைகளைப் புலப்படுத்திக்கொண்டு யாத்திரை செய்யுங்கால் அநேகமாமடியார்களுடன் கழுகாசலமென்னுந் திருக்கழுக்குன்றமடைந்து, ஸ்ரீ திரிபுர சுந்தரி சமேதராம் வேதகிரீஸ்வரரைத் தரிசித்துத் தேவாரப்பதிகம் பாடி அப்பெருமானது திருவருள்பெற்று, அச்சுவினி தேவர்கள், இந்திரன், பிரமன், விஷ்ணு, சனகராதி நான்கு முனிவர்கள் முதலியோர்கள் சிவபெருமானைப்பூசித்து வேண்டிய வரங்களைப்பெற்ற க்ஷேத்திரமாகிய திருக்கச்சூரில் அந்தகார நிவாரணி சமேத

ஔஷதகிரீஸ்வரரைத் தரிசிக்கத் திருவுளங்கொண்டு புறப்பட்டு வரும்போது தமது அடியார்களெல்லாம் பின் தங்கி வரத் தான் மாத்திரம் தாயைநினைந்து விரைந்துவருங் கன்றுபோல்விரைந்து வந்து திருக்கச்சூர் ஔஷதகிரியை யடைந்து அங்கெழுந்தருளி யிருக்கும் உமாமகேஸ்வரரை வணங்கித் தரிசித்துப் புறத்தணைந் தனர். அச்சமயம் தாம் திருவமுது செய்யும் பொழுதாகவும் தமது பரிசனங்கள் அந்நேரம்வரையில் வரவில்லை. நமது குரு மூர்த்திகளோ பசி அதிகமாய் வருத்த அவ்வாலயத்தின் மதிற் புறத்தில் பெருமானைத் தியானித்துக்கொண்டிருந்தனர்.

இவ்வண்ணம் பசியின் கொடுமையால் மிகவும் தளர்ந்து சோர்ந்திருக்கும் அவரதுவருத்தத்தைப் "பெற்றவட்கே தெரியு மந்தப் பிள்ளைவருத்தம்" என்னும் ஆன்றோர் வாக்கிற்கிணங்க எந்தையாம் ஔஷதகிரீஸ்வரர் சகியாதவராய், ஓ ராதிசைவ மறையோராய் ஒரு பிக்ஷாபாத்திரத்தைக் கையிலேந்தி சுந்தர மூர்த்திசுவாமிக ளெதிரே வந்து; ஐய அன்பரே! நீர் மிகவும் பசியினு லிளைத்திருக்கின்றீர். உமது பசிநோயின் கொடுமையை ஒழிக்க இப்பொழுதே அன்ன மிரந்து வந்து உமக்களிக்கின் றேன், சற்றுநேரம் பொறுத்துக்கொண்டிரும், எங்கும் போய் விடாதேயும், உலகத்திற் செய்யும் புண்ணியங்களில் உத்தமமா னது பசிக்கன்னங் கொடுத்தல்தான் என்று வேதாகமபுராணங் களில் விளக்கியிருக்கின்றதல்லவா என்று பரிந்துரைத்து, திரு மேனியெங்கும் வெண்டிரு நீற்றுக்கோலம் விளங்கவும், உபவீத மாம் பூணூல் துலங்கவும், கண்டவர்கள் மனமுருகவும், தாமரை மலர்போன்ற திருவடிகள் பூமியிற் பொருந்தவும், அத்திருக்கச் சூரில் மத்தியானப்போதில் ஆதி சைவப் பிராமணர்கள் வாழும் வீதியிற் புகுந்து அவர்கள் வீடுதோறும் அன்னமிரந்து வந்து நம்பியாரூரராம் தமது தோழர் முன்பு அடைந்து, ஐய! உமது பசி தீர இவ்வன்னத்தை யருந்துமென்று கொடுக்க, சுந் தரமூர்த்தி சுவாமிகளும் சிவபிரானுகிய மறையவரது பெருங் கருணையின் மிகுதியை நன்கு மதித்து, தமது திருவுளத்திற்கொ ண்ட பெரிய விருப்பினேடு அவரை நேரில் தொழுது அவ்வமு தினைத் தமது திருக் கரங்களால் வாங்கினர். இதற்குள் பின் தங்கி வந்தவர்களாகிய தமது திருக்கூட்டத்தினராகிய அடியார் கள் தம்பிரான் தோழரிடத்து வந்துவிட்டனர்கள். அவ்வடிய

வர்களோடு அவ்வன்னத்தை அமுதுசெய்து அவ்விடத்து வீற்றிருந்தனர்.

அத்தருவாயில் தமது பசிக்கு அன்னமிரந்து வந்தருளிய அண்ணலாம் ஔஷதகிரீஸ்வரர் இருந்தாற்போல்இருந்து மறைந்தருளினர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆ! ஆ! இங்கு நம்முடன் வீற்றிருந்த அந்தணரைக் காணேமே என்று எப்புறமுந் தேடக் கிடைத்திலரானமையால், எமது பெருமானே அடியேனது பசியைத் தீர்க்க இவ்வாறு அந்தணர் கோலங்கொண்டெழுந்தருளி அன்னமிரந்துவந் தளித்தனர் என்று அதிசயித்து ஆனந்தக் கண்ணீர் பொழிந்து மயிர்ப்புளகம் மூட, "முதுவாயோரி கதற" என்னும் தேவாரத்தையோதி ஆனந்தபரவசமடைந்தனர்.



## இச்சரித்திரங் கூறிய பெரியபுராணச் செய்யுள்

## ஏயர்கோன் கலிக்காம நாயனர் புராணம்.

---

"தேனார்ந்தமலர்ச்சோலைத்திருக்கழுக்குன்றத்தடியா
ராணுதவிருப்பிணெடுமெதிர்கொள்ளவடைந்தருளித்
தூநாள்வெண்மதியணிந்தசுடர்க்கொழுந்தைத்தொழுதிறைஞ்சிப்
பாணுடுமின்னிசையின்றிருப்பதிகம்பாடினர். கள்ங

பாடியவப்பதியின்கணினிதமர்ந்துபணிந்துபோய்
நாடியநல்லுணர்வினெடுந்திருக்கச்சூர்தனைநண்ணி
யாடகமாமதில்புடைசூழாலக்கோயிலின்னமுதைக்
கூடியமெய்யன்புருகக்கும்பிட்டுப்புறத்தணைந்தார். களச

அணைந்துவருமவ்வேலையமுதுசெய்யும்பொழுதாகக்
கொணர்ந்தமுதுசெய்தளிக்கும்பரிசனமுங்குறுகாமைத்
தணந்தபசிவருத்தத்தாற்றம்பிரான்றிருவாயிற்
புணர்ந்தமதிற்புறத்திருந்தார்முனைப்பாடிப்புரவலனர். களரு

வன்றொண்டர்பசிதீர்க்கமலையின்மேன்மருந்தானர்
மின்றங்குவெண்டலையோடொழிந்தொருவெற்றோடேந்தி
யன்றங்குவாழ்வாரோரந்தணராய்ப்புறப்பட்டுச்
சென்றன்பர்முகநோக்கியருள்கூரச்செப்புவார். களசு

மெய்ப்பசியான்மிகவருந்தியிளைத்திருந்தீர்வேட்கைவிட
யிப்பொழுதேசோறிரந்திங்கியானுமக்குத்தருகின்றேன்
அப்புறநீரகலாதேசிறிதுபொழுதமருமெனச்
செப்பியவர்திருக்கச்சூர்மனைதோறுஞ்சென்றிரப்பார். கஎஎ

வெண்டிருநீற்றணிதிகழவிளங்குநூலொளிதுளங்கக்
கண்டவர்கண்மனமுருகக்கடும்பகற்போதிடும்பலிக்குப்
புண்டரிகக்கழல்புவிமேற்பொருந்தமனைதொறும்புக்குக்
கொண்டுதாம்விரும்பியாட்கொண்டவர்முன்கொடுவந்தார். கஎஅ

இரந்துதாங்கொடுவந்தவின்னடிசிலுங்கறியு
மரந்தைதரும்பசிதீரவருந்துவீரெனவளிப்பப்
பெருந்தகையார்மறையவர்தம்பேரருளின்றிறம்பேணி
நிரந்தபெருங்காதலினானேர்தொழுதுவாங்கினார். கஎசு

வாங்கியவத்திருவமுதுவன்றொண்டர் மருங்கணைந்த
வோங்குதவத்தொண்டருடனுண்டருளியுவந்திருப்ப
வாங்கருகுநின்றார்போலவர்தம்மையறியாமே
நீங்கினாரெப்பொருளுநீங்காதநிலைமையினார். கஅ0

திருநாவலூராளிசிவயோகியார்நீங்க
வருநாமமறையவனாரிறையவனாரெனமதித்தே
பெருநாதச்சிலம்பணிசேவடிவருந்தப்பெரும்பகற்க
ணுருநாடியெழுந்தருளிற்றென்பொருட்டாமெனவுருகி. கஅக

முதுவாயோரியென்றெடுத்துமுதல்வனார்தம்பெருங்கருணை
யதுவாமிதுவென்றதிசயம்வந்தெய்தக்கண்ணீர்மழையருவிப்
புதுவார்புனலின்மயிர்ப்புளகம்புதையப்பதிகம்போற்றிசைத்து
மதுவாரிதழிமுடியாரைப்பாடிமகிழ்ந்துவணங்கினார்." கஅஉ

திருச்சிற்றம்பலம்

---

ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் அருளிச் செய்த

## திருக்கச்சூராலக் கோயில்

# தே வா ர ம்



பண் - கொல்லிக் கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்

முதுவாயோரிகதறமுதுகாட்டெரிகொண்டாடல்முயல்வானே
மதுவார்கொன்றைப்புதுவீசூடுமலையான்மகடன்மணவாளா
கதுவாய்த்தலையிற்பலிநீகொள்ளக்கண்டாலடியார்கவலாரே
யதுவேயாமாறிதுவோகச்சூராலக்கோயிலம்மானே. க

கச்சேரரவொன்றரையிலசைத்துக்கழலுஞ்சிலம்புங்கலிக்கப்பலிக்கென்
றுச்சம்போதாவூரூர்திரியக்கண்டாலடியாருருகாரே
யிச்சையறியோமெங்கள்பெருமானேயேழ்பிறப்புமெனையாள்வா
யச்சமில்லாக்கச்சூர்வடபாலாலக்கோயிலம்மானே. உ

சாலக்கோயிலுளநின்கோயிலவையென்றலைமேற்கொண்டாடி
மாலைத்தீர்ந்தேன்வினையுந்துரந்தேன்வானோரறியாநெறியானே
கோலக்கோயில்குறையாக்கோயில்குளிர்பூங்கச்சூர்வடபாலை
யாலக்கோயில்கல்லால்நிழற்கீழறங்களுரைத்தவம்மானே. ங

விடையுங்கொடியுஞ்சடையுமுடையாய்மின்னேருருவத்தொளியானே
கடையும்புடைசூழ்மணிமண்டபமுங்கன்னிமாடங்கலந்தெங்கும்
புடையும்பொழிலும்புனலுந்தழுவிப்பூமேற்றிருமாமகன்புல்கி
யடையுங்கழனிப்பழனக்கச்சூராலக்கோயிலம்மானே. ச

மேலைவிதியேவினையின்பயனேவிரவார்புரமூன்றெரிசெய்தாய்
காலையெழுந்துதொழுவார்தங்கள்கவலைகளைவாய்கறைக்கண்டா
மாலைமதியேமலைமேன்மருந்தேமறவேனடியேன்வயல்சூழ்ந்த
வாலைக்கழனிப்பழனக்கச்சூராலக்கோயிலம்மானே. ரு

பிறவாயிறவாய்பேணுய்மூவாய்பெற்றமேறிப்பேய்சூழ்தல்
துறவாய்மறவாய்சுடுகாடென்றுமிடமாக்கொண்டுநடமாடி
யொறுவாய்த்தலையிற்பலிகொள்ளக்கண்டாலடியாருருகாரே
யறவேயொழியாய்க்கச்சூர்வடபாலாலக்கோயிலம்மானே. சா

பொய்யேயுன்னைப்புகழ்வார்புகழ்ந்தாலதுவும்பொருளாக்கொள்வானே
மெய்யேயெங்கள்பெருமானுன்னைநினைவாரவரைநினைகண்டாய்
மையார்தடங்கண்மடந்தைபங்காமதியஞ்சடைவைத்த
ஐயாசெய்யாய்வெளியாய்கச்சூராலக்கோயிலம்மானே எ

ஊனைப்பெருக்கியுன்னைநினையாதொழிந்தேன்செடியேனுணர்வில்லேன்
கானக்கொன்றைகமழமலருங்கடிநாறுடையாய்கச்சூராய்
மானைப்புரையுமடமென்னோக்கிமடவாளஞ்சமறைத்திட்ட
ஆனைத்தோலாய்ஞானக்கண்ணுயாலக்கோயிலம்மானே. அ

காதல்செய்துகளித்துப்பிதற்றக்கடிமாமலரிட்டுனையேத்தி
யாதல்செய்யுமடியாரிருக்கவையங்கொள்ளவழகிதே
யோதக்கண்டேனுன்னைமறவேனுமையாள்கணவாவெனையாள்வாய்
ஆதற்பழனக்கழனிக்கச்சூராலக்கோயிலம்மானே. சூ

அன்னமன்னும்வயல்சூழ்கச்சூராலக்கோயிலம்மானை
யுன்னமுன்னுமனத்தாரூரனாரூரன்பேர்முடிவைத்த
மன்னுபுலவன்வயல்நாவலர்கோன்செஞ்சொல்நாவன்வன்றொண்டன்
பன்னுதமிழ்நூல்மாலைவல்லாரவரெந்தலைமேற்பயில்வாரே. க0

திருச்சிற்றம்பலம்.



திருக்கச்சூர் ஆலக்கோயில்

# தோத்திரமஞ்சரி.



## தாலமூல விநாயகர் துதி.

சீர்திருக் கச்சூர் நகரினி லென்றுஞ்
சிதைவுறாத் தாலமூ லத்திற்
பேர்பெறும் பெருமான் பிரமனார் மருகன்
பிறையணி வேணியன் குமரன்
கூர்தருங் குந்தப் படைக்கரன் முன்னோன்
குஞ்சர வதனனெண் குணத்தன்
ஏர்தரு மொற்றை மருப்பனென் னுளத்தி
னென்றுநீங் காதுநண் ணுவனே.

## ஸ்ரீ மருந்தீச்சுரர் பதிகம்.

திருமறு மார்பன் றிசைமுகன் வானோர்
தேடருஞ் சிவபெரு மானே
கருவயி னுதியா தடியவர் தம்மைக்
காத்திடுங் கண்ணுதற் றேவே
மருமலர்க் குழலா ளிருளிரி யம்மை
வனமுலை தழுவுமார் பகனே
அருவினை களைகச் சூரினி லோங்கு
மௌடத கிரியினா யகனே.



மண்ணுடன் பெண்ணும் பொன்னுமென் றுரைக்கும்
வலியமூ வாசையிற் சுழன்று
கண்ணிலா விலங்கு போலவே மயங்கிக்
கருந்தருந் துன்பசா கரத்தி

னுண்ணிலா வியநெஞ் சடியனே னெந்நா
ளுண்மையா ஞானம தடைவேன்
அண்ணிய வடியேற் கருடரு கச்சூ
ரௌடத கிரியிணு யகனே. உ

சுந்தரர் தமக்குப் பரிந்தமு தேற்றுச்
சுடுபசி களைந்திட வருள்செய்
அந்தணு வாலின் கீழெழுந் தருளி
யருமறை முனிவரர் தமக்கு
முந்துறு ஞான மொழிதரு மூர்த்தி
மும்மலங் களைந்தடி யவன் பால்
அந்தகன் வாரா தருள்புரி கச்சூ
ரௌடத கிரியிணு யகனே. ௩

சிந்துர முகத்தன் சேவலங் கொடியோன்
செல்வியா மிருளிரி யுமையாள்
பந்தம தறுத்த சண்டிகேச் சுரனும்
பாங்குற விடையினி லிவர்ந்தே
எந்தன்மு னெய்தி யருள்செயுங் கால
மெப்பொழு தோவதை யறியேன்
அந்தரர் புகழ்கச் சூரினின் மேவு
மௌடத கிரியிணு யகனே. ச

மூவர்கண் முதல்வ முக்க ணெம் பெரும
முனிவரர்க் கருளிய குரவ
தேவர்க டேவ சிவசிவ சம்போ
திரிபுர தகனசீ ரமல
நாவலர் புகழு நம்பசெவ் வேணி
நாரியோர் பாகவெற் கருளாய்
ஆவல மேறு மையசீர்க் கச்சூ
ரௌடத கிரியிணு யகனே. ரு

முத்தன நகையார் மயலினின் மூழ்கி
முன்னுடன் பின்னுமே யறியாப்
பித்தனைப் பேயேன் றன்னையாண் டருளப்
பெருவிடை மேலெழுந் தருளி

இத்தினம் வந்தே யெளியனை யாள்வா
யெந்தையே சிவபெரு மானே
அத்தனே திருக்கச் சூரினின் மேவு
மௌடத கிரியினா யகனே. ௬

மருத்துவர் மகவான் மலரயன் மாலோன்
வானவர் முனிவரர் மற்றோர்
கருத்துடன் பூசை புரியவே யருளுங்
கண்ணுதற் றெய்வமே யருளாய்
திருத்தகு சீரா ரிருளிரி யுமையாள்
சேரிடப் பாகனே மறையின்
அருத்தனே கச்சூ ரமர்தரு மெழிலா
ரௌடத கிரியினா யகனே. ௭

செங்கை மான் மழுவு மேந்திய பெரும
சேவினி லிவர்ந்தடி யவர்க்குத்
தங்கிய வருள்செய் தாணுவே நாயேன்
றனக்குமே யருள்வழங் கிடுவாய்
பொங்குறு கதிரோன் மதிமுதற் கோள்கள்
புகல்பல நாள்களும் வலமார்
அங்கனு மோங்க வளர்திருக் கச்சூ
ரௌடத கிரியினா யகனே. ௮

மதிமுகம் பவள வாய்மணி முறுவல்
வரிசிலை நுதல்வடு விழிகள்
சதிருறு கோங்கு முலைகழைத் தோளார்
தடமணி யல்குலா மாழி
யதனினு ளாழ் மூழ்கிய சிறியேற்
கருள்வையோ வைவகோ வறியேன்
அதிகமு முயர்ந்து வளர்திருக் கச்சூ
ரௌடத கிரியினா யகனே. ௯

வலமுறு மூன்று மதிலெரி யுனது
வாணகைப் பாவமா மெயிலை
வலமற வெரித்து மாணுறு மருளை
வழங்கிடு நாளது வருமோ
சிலைவிலாக் கொண்ட தேவனே யமரர்
திரளினைக் காத்திட வெழுந்த
அலைகட னஞ்சுண் டருளிய கச்சூ
ரௌடத கிரியினா யகனே. ௧0

## இருணீக்கியம்மையார் பதிகம்

### கோச்சகக் கலிப்பா.

சீரார் திருக்கச்சூர் செல்விசெக மீன்ற வெங்கண்
காரார் மதம்பொழியுங் கருக்கடிவி நாயகன்றாய்
வாரார் தனக்குறத்தி வள்ளிக்கோர் மாமியுநீ
ஏரா ரிருணீக்கி யெந்தா யிரங்கா யோ. ௧

அன்றொருநாட் சுந்தரரா மந்தணரி னம்பகத்தின்
துன்றிருளை நீக்கியொளி சோதிதிருக் காட்சிதந்து
வன்றுணைய வினைமாய்த்த வல்லியடி யேற்குமருள்
இன்றுணையா மிருணீக்கி யெந்தா யிரங்காயோ. ௨

கோணு ணிதஞ்சூழுங் குன்றுகுனித் தூர்மூன்று
நீணுகப் பள்ளியம்பா னீறுக்கு மெம்பெருமான்
மாணுரிடப்பாக மன்னியசீர் கச்சூரின்
ஏணு ரிருணீக்கி யெளியேற் கிரங்கா யோ. ௩

வண்டமர்பூஞ் சோலைகளும் வனசமலர் வாவிகளும்
எண்டிசையு மிமையோர்க ளேத்துகின்ற பேரொலியும்
மண்டுகின்ற கச்சூரின் மன்னுமருந் தீசர்மகிழ்
கண்டெரிய விருணீக்கிக் கயவனெனை யாளாயோ. ௪

சிவபுரிநே ரேறுகின்ற திருப்படியா யோங்குகின்ற
அவலமிலா மலையொளிரு மௌடதேச் சுரர்மகிழு
நவலோகஃநாயகியே நங்கையே யடியேனைப்
பவரோக மிரித்தருள்வாய் பூங்குறுகச் சூரனையே. ௫

மந்திரநீ மருந்துநீ மணியுநீ மாணுற்ற
எந்தையுநீ என்றாய்நீ யின்றுணையு மாவாய் நீ
தந்திரமெல் லாம்போற்றுந் தயாநிதியு நீகச்சூர்
சுந்தரியே யிருணிக்கி சோதியுமை யாளுவையே. ௬

அடியவர்கள் போற்றுகின்ற மம்புயநே ரடிகடமைக்
கடியவனு மியான்காணக் கனவிலெனுங் காட்டிலையே
துடியிடையாய்க் காட்டுதற்குத் தூயமன மகிழ்ந்தருளாய்
படிபுகழ்கச் சூரமரும் பகவனு ரிடத்துமையே. ௭

காழிநகர்க் கவுணியனுர் கான்முளைதா னழுபொழுது
வாழிமுலை சுரந்தூட்டு மணிவள்ளங் கழுவியெனும்
பாழிவினை யடியேன்றன் பானீங்க வருளுவையோ
தாழிதிருக் கச்சூரிற் சவுந்தரியா மெம்மனையே. ௮

பணியமளி மிசைத்துயிலும் பரந்தாமன் போற்றுகின்ற
கணிசெறிநற் கச்சூரின் கனகமலை மேலமர்ந்த
அணியுடைய மருந்தீச ராசையிசை யருந்துணையே
ஏணியேத்து மடியேன்ற னிருணீக்கி யாளுவையே. கூ

திருநீறு கண்மணியுஞ் சேரவணிந் தருநாவில்
அருளூறு மைந்தெழுத்தை யருளுகின்ற வடியவரைக்
கருநீற வண்ணலொடு கலப்பிக்குந் திருக்கச்சூர்
இருணீக்கி யுமையனையே எளியவனைக் காத்தருளே. க0



# விருந்திட்டேச்சுரர் சதுர்த்தம்.



பூங்கமல மனையகின் ருளிணை பழிச்சிமெய்ப்
புகழைவா யார வோதிப்
புந்திநிறை யுவகையா லக்கமணி மாலிகைப்
பொலிவுறப் பூண்டுகொண்டு
தேங்குபே ராசையா னுடலெலாம் புண்ணியத்
திருநீற்றி னுத்தூ ளனஞ்
செய்துபஞ் சாக்கரந் துதித்திடப் பெறூர்பெறுஞ்
சென்மமற் றென்ன சென்ம
மோங்குபரி பூரண வாரண வாரணத்
துரிபூண்ட செகத்காரண
வுனதுரிய வண்ண மளித்திமேற் பதவியை
யுதவிடு மொப்பிலாதோய்
வீங்கொலிப் புறம்பணைத் தடம்பொய்கை சூழ்ந்துவள
மிகுதிருக் கச்சூரினுண்
மெலிந்துற்ற சுந்தரர்க் கிரந்திட்ட பிச்சையால்
விருந்திட்ட மகதேவனே. க

ஆலயஞ் செய்வோரை மானிடரெனக் கருது
மறிவிலார்க் கேநரகெலா
மமைந்ததென் றூரண கமமெலா முழங்குதலி
னன்பின னுனதுகோயிற்
சீலமார் திருப்பணிகண் முழுவதூஉஞ் செய்துநித்
தியத் தொடு நைமித்திகந்
திகழ்பூசை செய்துவரு மவர்பாத தூளியென்
சிரமீதிருக்க வருள்வாய்

காலமீ தாலெனப் பாலனர் மேல்வருங்
காலருங் குருதிவாயிற்
காலவே காலனைக் காலினற் காதிடுங்
கருணையா யிருவிழிகளும்
வேலினைச் சேலினைக் கோலினைப் போல்பவர்கள்
மிகுதிருக் கச்சூரினுண்
மெலிந்துற்ற சுந்தரர்க் கிரந்திட்ட பிச்சையால்
விருந்திட்ட மகதேவனே. உ

உடம்பெடுத் தாலறஞ் செய்யவே வேண்டுமதி
லுத்தமஞ் சிவபுண்ணிய
முயர்ந்தவதா மதனினுஞ் சிவாலயப் பணியதி
னுத்தமோத் தமமாகிய
திடம்பெறுஞ் சீரணைத் தாரணத் திருப்பணிகள்
செய்ததோர் திருப்பேற்றினைச்
சிறியனே னென்னென்று சொல்லுவே னவர்பெற்ற
செல்வமே நலலசெல்வ
மடம்பிடித் துடம்பிடிக் கொடும்படைக் கடங்கிடா
வயம்படைத் தடர்த்த விழிமான்
வடங்கடிந் திலங்கிடுங் குடங்கடிந் திடங்கொண்டு
வாய்த்தபணை முலைப்பாகனே
விடந்தனை மிசைந்தருள் புரிந்தபே ராளனே
மிகுதிருக் கச்சூரினுண்
மெலிந்துற்ற சுந்தரர்க் கிரந்திட்ட பிச்சையால்
விருந்திட்ட மகதேவனே. ௩

செய்யதா தவிழ்பாத தாமரைகள் நிலமிசைத்
தீண்டநுதல் வேரரும்பத்
திருமேனி முழுவதுங் கரைவெள்ள மம்மைதன்
றிருவுளங் குழைந்துநைய
பையவே யெய்தியுற் றூர்மறுகு தொறுநண்
பகலெலாம் பலிதிரிந்தோர்
பத்தருக் காகநீ யெளிவருங் கருணையைப்
பாவியேன் புகலவசமோ
துய்யதா மதிதாக சிவமோக பரிபாக
சோகபாவனையில் வல்லோர்
சுயமாக நிறையோக பரயோக நிலைபெற்ற
சுகமுதவு ஞானதேக

வெய்யவன் றேருலவு மலைமருந் தாகிவளை
    பிருதிருக் கச்சூரினின்
மெலிந்துற்ற சுந்தரர்க் கிரந்திட்ட பிச்சையால்
    விருந்திட்ட மகதேவனே. ச

வெண்பா.

திருக்கச்சூ ரன்வீரஞ் செற்றவனைப் பெற்ற
திருக்கச்சூ ரீசன் றிறமென்னே—திருக்கச்சூ
ரம்ம மடவா ரகந்தோ றிரந்திட்டோ
தம்மடிமை யாளுந்தரம்.



## அமுதத் தியாகேசர் பஞ்சரத்தினம்



திங்களணி கங்கையுட் டங்குவட் டச்சடை
    செஞ்சூட்டு வெண்ணிறத்த
சேவலன் னம்பயிலு மாகாய கங்கைசெறி
    செக்கர்வா னொத்தெழில் செயச்
சங்கவெண் குழையுமொளிர் பொற்றோடு மதியிரவி
    சகடுசக் கானதன்றித்
துங்கமழு மறியாண்மை பெண்மையை யுணர்த்துமுறை
    தோற்றிவல னிடமமர்ந்தாய்
சுத்தவெள் ளேற்றின்மிசை யுறைதலக் கைலைமலை
    துன்னிவாழ் தருதன்மானும்
அங்கமணி யங்கனே பொங்கொளிப் புயங்கனே
    யழகுவளர் கச்சூரில்வாழ்
அமுதத் தியாகமொழி குமுதத்தியாக வெழி
    லமுதத் தியாகையனே. க

முப்புர மெரித்தருளு நினதுவா ணகையெனது
    மும்மல மழித்திடாதோ
முளரிவிழி மன்மதனை நோக்கல்போ லென்கவலை
    முழுதகல நோக்கிடாதோ
துப்புலவு சேவடி சமன்வலி தடுத்தல்போற்
    றுன்றுபவ நீக்கிடாதோ
சுருதிவிதி யின்சிர மரிந்தகைத் தலமெனது
    துக்கவினை யைச்செறாதோ

# திருக்கச்சூர் ஆலக்கோயில்

கப்புர நரந்தமகிழ் கோங்குவழை சந்தகில்
கடுக்கைமா வாவசோகு
கழைபாட லங்குருக் கத்திநா கம்போதி
காஞ்சியொடு வஞ்சிவெட்சி
அப்புலவு முப்புடைக் காய்த்தெங்கு கமுகுசூழ்ந்
தழகுவளர் கச்சூரில்வாழ்
அமுதத் தியாகமொழி குமுதத்தியாக வெழி
லமுதத் தியாகையனே. ௧

சங்கிலி யெனுந்தொடர் பிணித்துநற் பரவையிடை
தள்ளுகினு முன்றனிருதாட்
சலசப் புணைக்கண்மகிழ் தங்குமொரு சுந்தரன்
றன்பசிதணிக்க வொருநாட்
பொங்குவெயி லுச்சிதனி னில்லந் தொறும்பிச்சை
புக்கிரந் திட்டவன்றன்
பொற்கவி யணிந்தவுனை நற்கவிகொ டேத்தாத
புலையனே னுய்வதென்றோ
சங்கத்தை நாரைக டழீஇயெழுந் தும்பரிற்
றங்கரு வலாமை யுணராத்
தானெறிந் திடவயி றுளைந்துமணி கான்றுவிழல்
தாரகையு மதியுமானும்
அங்கட் பொதிந்தசெந் தாமரைப் பொய்கைசூழ்ந்
தழகுவளர் கச்சூரில்வாழ்
அமுதத்தி யாகமொழி குமுதத்தி யாகவெழி
லமுதத்தி யாகையனே ௨

கண்ணப்ப னைப்பவொரு கண்ணிடந் தப்பிலேன்
காதன்மைந் தனையரிந்து
கறிசமைத் திடுகிலேன் காதலி சொலானில
கண்டரென விளமைநீக்கேன்
உண்ணச்செ னெல்லுதவு வாட்டாயர் போலவா
ளூட்டியிற் பூட்டியரியேன்
உன்னடியர் நேர்படி லுலம்பொரு மனத்தினே
னுனதடிய னுவதுண்டோ
பண்ணைக்கு ளெழுவாளை விண்ணைக் கிழித்துவெடி
பாய்ந்திரவி யிரதமுட்டிப்
பச்சைப் பழம்புரவி யச்சற் றகன்றிட்ப்
பண்ணியப் பண்ணைவிழலும்

அண்ணற் செழுங்கமல மேவன மெலாமிரியு
மழகுவளர் கச்சூரில்வாழ்
அமுதத்தி யாகமொழி குமுதத்தி யாகவெழி
லமுதத் தியாகையனே ௪

கஞ்சனொடு நாரணன் கதிர்மதி புரந்தரன்
கடன்மலை நிலந்தீவளி
ககனநீர் மேகமுயிர் யாவுமாய் நின்றநின்
கருணையை யறிந்திடாமல்
நஞ்சுவிழி யஞ்சநடை யெஞ்சுமிடை புஞ்சவளை
நளினக்கை மாதரெழிலே
நாடிக் கசிந்துருகி யூடிப் புணர்ந்தசிறு
நாயினே னுக்கருள்வையோ
பஞ்சியடி மாதரெழு நிலமாட மீதிவர்தல்
பண்ணவர்கண் ணூட்டினியலும்
பாவையரை யெம்மினையர் பண்படா தென்றுரை
பகர்ந்தவ ரணங்கியர்களாய்
அஞ்சிப் பணிந்திடற் செய்துமென வேகல்போன்
றழகுவளர் கச்சூரில்வாழ்
அமுதத் தியாகமொழி குமுதத்தியாகவெழி
லமுதத் தியாகையனே. ரு

## பதிகம்.

பொருளாட்சி நீயலது புகழாட்சி யென்றுறுதி
புரிமாட்சி யறியாமலே
பொன்னாட்சி மண்ணாட்சி பெண்ணாட்சி யென்றுமருள்
புத்திரரை யாட்சியென்று
மருளாட்சி கொண்டுமன திருளாட்சி யுற்றதுவில்
வருதாட்சி யென்னசொல்வேன்
மலமாட்சி யெனதகந் தனிலாட்சி கொண்டவதில்
வகையாட்சி யெவ்வுயிர்க்கும்
அருளாட்சி யெனவந்த கருணை கடாட்சியினி
யவதாட்சி வேறுசாட்சி
அருவாட்சி யுருவாட்சி தனதாட்சி யுலகாட்சி
யகரமுத லாட்சியென்றும்
தெருளாட்சி காமாட்சி விசாலாட்சி மீனாட்சி
திகழஞ்ச னாட்சிபங்கா
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராயத்
திருக்கச்சி நகரீசனே. க

உறப்பட்ட பழவினைக் குட்பட்ட ரும்பட்சி
யோட்டினிற் பட்டவிதிபோ
லூறுபட் டுள்ளமது வேறுபட் டுள்ளுடைந்
தூலைபட்டு மலைபட்டுமெய்ப்
பிறப்பட்டு மித்தையிற் பட்டுவீ ணலையப்
பேதையிற் பட்டுநெஞ்சம்
பிழைப்பட்ட னித்தியக் குழைப்பட்டு மாய்கையிற்
பேராசை பட்டுமீந்து
அறப்பட்ட பாவியெனை யாட்பட்ட தொண்டருக்
காராமை பட்டெநாளு
னவித்தை யிற்பட் டுணர்வுசெய் கையிற்பட்ட
வடிமைபா லவைகணீக்கித்
திறப்பட்ட சைவத்தில் வழிபட்டு ஞானமய
சித்தியில் வெளிப்படுவனோ
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராயத்
திருக்கச்சி நகரீசனே. ௨

தண்டிகை யிருந்தென்ன பல்லக் கிருந்தென்ன
சம்பத் திருந்துமென்ன
சனமிருந் தென்னபல மனுவிருந் தென்னதன
தானிய மிருந்துமென்ன
உண்டிகை யிருந்தென்ன மைந்தரு மிருந்தென்ன
வுற்றா ரிருந்தென்னவா
மூரிருந் தென்னநிறை சீரிருந் தென்னநிதி
யூதிய மிருந்துமென்ன
எண்டிசை செலுத்துசெங் கோலிருந் தென்னமற்
றேதிருந் தாலுமென்ன
வித்தனையு முடிவிலே மெய்யான தில்லையே
யெல்லாம் வெறுந்தொல்லையே
தெண்டிரைப் புவிதனி லுனதுதிரு வருளான
சீரிருந் தாற்போதுமே
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராயத்
திருக்கச்சி நகரீசனே. ௩

மெட்டிலே மங்கையர் மயக்கிலே வாடையணி
வீச்சிலே யவர்பேச்சிலே
மேனகைக் கிலுக்கிலே கொங்கைக் குலுக்கிலே
வேடிக்கை யானகட்டு
மட்டிலே மைக்கண்விழி வெட்டிலே நடையினிறு
மார்பிலே வருநேர்பிலே

மாயத்திலே சம்பிர தாயத்திலே யேத்து
வகையிலே திலதவட்டப்
பொட்டிலே மஞ்சட்பகட்டிலே வாசனைப்
பொடியிலே சிற்றிடையிலே
போகத்திலே சுரத ராகத்திலே சிங்கி
பூட்டிநட மாட்டிவைக்குந்
தெட்டிலே பட்டுமய லொட்டிலே வீழாத
சிந்தனை யெனக்கருளுவாய்
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராய
திருக்கச்சி நகரீசனே.

மண்கொண்ட பூமியிற் றண்கொண்ட தாருநீ
மணிகொண்ட வாருதியுநீ
மதிகொண்ட தென்னனீ கூதிகொண்ட கன்னனீ
மாலென்று கொண்டாடியும்
பண்கொண்டு பாடியிசை வண்கொண்டு கண்டுசொற்
பரிவுண்டெ னத்தில்விண்டு
பாக்கொண்டி டாதறிவி னைக்கொண்டு வேறே
பார்முகங் கொண்டிருக்கும்
எண்கொண்ட நெஞ்சரைக் கண்கொண்டு முறைகொண்டு
விதையமுங் கொண்டுவீணே
யெதிர்நின்று பண்டுண்ட வினைவிண் டிடக்கருணை
யெளியேனை யாண்டுகொண்ட
திண்கொண்ட மலையுதவு பெண்கொண்ட நாயகர்
செங்கொண்ட லனையதேவே
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராய
திருக்கச்சி நகரீசனே. ரு

பஞ்சபூ தம்மென்று பொறியென்று புலனென்று
பகர்கரும ஞானமென்று
பயில்கரண மென்றுமித் தைகளென்று நாடியிற்
பதிகின்ற வாயுவென்றும்
நெஞ்சென்று குணமென்று கோசங்க ளென்றுசொல
நெறியவத் தைகளென்றுசேர்
நீடுமல மென்றுமோ ரறிவென்று வினையென்று
நேசித்த ராகமென்றுஞ்
சஞ்சிதங் கொடுவந்த தென்றும் பிராத்துவங்
தானென்று நானென்றுமிச்
சகமென்று மேலவத் தைகளென்று திரிகின்ற
சடமென்ற வதனைவென்றுன்

செஞ்சரண முன்சென்று தஞ்சமென் றருளென்ற
 செயலின்று தந்தருளுவாய்
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராய
 திருக்கச்சி நகரீசனே. சு

வாரிட்ட முலையின்மணி வடமிட் டசைத்துவிழி
 வலையிட்டு நேயமிட்டு
மணமிட்டு மயலிட்டு மோகமு மிட்டுமெய்
 வடிவுக்கு ளுணர்வுமிட்டு
ஏரிட்ட வார்த்தைப் பசப்பிட் டிழுக்கிட்
 டிடந்திட் டுருக்கமிட்டு
யிடுவந்தி யிட்டுப் பிணக்கிட் டறப்பாடை
 யிட்டுத் தூரத்துமடவார்
போரிட்ட கலவியினி னேர்பட்டு மலைபட்டு
 புன்கணைப்பட்டு மன்னுர்
பொய்மையி லகப்பட்டு யெவ்விதப் பட்டுயான்
 புணைப்பட் டிராதெனுளும்
சீரிட்ட வுனதுதா டனின்மல ரிட்டுயான்
 றெரிசிக்க வரமருளுவாய்
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராய
 திருக்கச்சி நகரீசனே. எ

என்னில்லை நாடிவரு துன்பங் கணக்கில்லை
 யில்லாமை தீரவில்லை
யேரில்லை பாரில்லை மற்றுமொரு தொழில்வழிக்
 கிடமிலைத் திடமுமில்லை
பின்னில்லை முன்னில்லை வீறுண்மை யல்லாற்
 பிழைப்பொன்று மில்லையந்தப்
பெருமையறி வாரில்லை யருமையறி வாரிலைப்
 பேசுவா ரில்லையென்பால்
பொன்னில்லை மிக்கான மண்ணில்லை யாதலால்
 போக்குநீக் கில்லைவேண்டும்
பொருளெமக் கருளநின் கிருபையா னந்தநிதி
 பூரிப்ப தேகருணையாந்
தென்னிலங் கேசன்முடி நெரியவிர லொன்றினுற்
 சிகரத்தி லூன்றுபாதா
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராய
 திருக்கச்சி நகரீசனே. அ

மேருவணு வாகவு மணுவுமக மேருவாம்
வேலையே ழும்பிடித்து
வெய்யசிறு கடுகினி லடைக்கலா மிருபொழுது
வெண்கனலின் மூழ்கியெழலாம்
ஆருமறி யாதோ ரிடத்தினு மிருக்கலா
மங்கையிற் கதிகாட்டலா
மாயிரம் பகுவாய்கொ டுலகைச் சுமக்கின்ற
வட்டநா கமுமாட்டலாம்
சீருலவு பொன்னுலகை மண்செய்ய லாமிச்
செகத்தையும் பொன்செய்யலாம்
சினமடக் குவதுமைம் புலனடக் குவதரிது
செப்பமுடி யாதெனரனே
தேருலவு வீதியும் பலவாவி மண்டபந்
திகழ்சிகர வரைபடைத்தாய்
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராய
திருக்கச்சி நகரீசனே. ௯

வஞ்சனைப் பொய்யனைக் கொலைகளவு மெய்யனை
மமதையாங் காரவிடனை
மற்றனைக் குற்றனைச் சித்தமொத் தில்லாத
வர்மனைக் கர்மபுலனைக்
கொஞ்சனைக் கொடியனைக் கனிவிலா னைப்பதித
கொள்ளைக் குணமுளானைக்
குடியனைத் தடியனைப் பொடிப்புனைந் திலவனைக்
குருமொழிக் கெதிர்நாவனை
பஞ்சனைப் பதகனைச் சஞ்சிதக் குடிலனைப்
பஞ்சாக்க ரஞ்சொலானைப்
பரிவொன் றிலானைப்பொ றுமையா னைச்சுருதிப்
பண்ணிசையுள் ளகமிலானைச்
செஞ்சொலிற் பணியிதென் றறிவிலே னுக்குனது
திருவடிப் பெருமையருள்வாய்
செருக்கச்ச மறுநேய வருக்கச்சின் மயராய
திருக்கச்சி நகரீசனே. க0



## தோத்திர பஞ்சகம்

### அறுசீராசிரிய விருத்தம்.

கருப்பற்றார் மெய்ஞ்ஞானக் கடலிலாழ்ந்
திடுவரைக் காலத் துஞ்சீர்
விருப்புற்றார்ந் திடத்தம்பால் விளங்குவோ
ரியாவர்க்கு மிக்கோ ராவா
ருருக்கற்றார் பாடியவன் றொண்டருக்குப்
பிச்சைச்சோ றுவந் தளித்த
திருக்கச்சூ ரமுதத்தியா கேசர் தமை
நெஞ்சமே சேவிப் போமே. க

சேவிப்போர்க் கருள்செய்யுந் தேவனது
பெருங்கருணை செப்பக் கேண்மோ
தேவர்க்கா விடமுண்டான் றிரிபுரத்தை
நகைத்தெரித்தான் செங்கண் மாலும்
பூவில்வாழ் வேதனுஞ்செய் போர்தவிர்த்தாட்
கொண்டானெப் போதுங் கச்சூர்
மேவிவா ழமுதத் தியாகேச
வள்ளலருள் விரும்பு நெஞ்சே. உ

விரும்புவார் பவமெலா மகற்றுவான்
மெய்ஞ்ஞானம் விளங்கச் செய்வான்
பெரும்புவியி லான்றோர்கள் வேண்டலெலா
மளிப்பானெம் பெருமா னவன்
சுரும்புவளர் மலர்த்தடஞ் சூழ் திருக்கச்சூர்
தன்னில்வாழுந் தொன்மை யாளன்
அரும்பரமா னந்தநட மபிரியமுதத்
தியாகேச னறிவாய் நெஞ்சே. ௩

நெஞ்சேயென் றென்னவுரைத் தாலுமுன்றன்
செவிகேட்ப தில்லைநிச மாகவுந்தன்
செஞ்சேவ டிக்காளா யடியார்தங்
குற்றேவல் செய்யச் செய்தென்
பஞ்சேந்தி ரியச்சேட்டை யகற்றிமன
னின்னருளைப் பற்றச் செய்வாய்
அஞ்சேலென் றருள்கச்சூ ரமுதத்தியா
கேசாநின் னடிய னேற்கே ச

அடியாருட் கருத்தறிந்திவ் வவனிமேல்
வேண்டலெலா மளிபூங் கோவே
மிடியாலும் பிணியாலு மெலிகின்றே
னவைதீர்ப்பாய் மெய்ய னேவெண்

பொடியாரு மேனியனே திருக்கச்சூர்
தனில்வாழும் புனித னேநற்
கடியாருங் கொன்றையணி யமுதத்தியா
கேசாமெய்க் கருணை கூர்ந்தே. ரு



## கருக்கடி விநாயகருக்கும் தியாகராயருக்கும் மருந்தீசருக்கும்
### கலித்துறை.

மருக்கடி மாமல ராளரு ணேக்கம் வாணியம்மன்
இருக்கடி நோக்கமும் பெற்றின்ப வாழ்விற் சிறந்திருப்பார்
இருக்கடி மேவும் பிரணவ ருப ரெழில்கொள் கச்சூர்
கருக்கடி மாமுகன் பாதார விந்தத்தைக் கண்டவரே.

ஆலடி மாவி னடிகுருந் தத்தி னடிமறையா
நூலடி யந்த நடுவாழ் தியாகமுன் னேனளித்த
தாலடி யத்தியைச் சேர்ந்தெழு மாதவர் தாம்பணிந்த
காலடி கண்டவர் காலடி காணுங் கணக்கில்லையே. க

செம்பா வினிய புலவோர்கள் சாற்றுஞ் சிறந்தவொற்றைக்
கொம்பா கருக்கடிக் குஞ்சரமே யிந்தக் கூர்மபுரிக்
கம்பாரு மேக மிருநாழி மட்டு மடக்கியரன்
கும்பாபி டேகஞ்செய் தான்பிற கேவரக் கூர்ந்தருளே. உ

நச்சூர் விழிமட வார்மயலி ன்மத னல்குமம்பு
தைச்சூர் தொறுமுழ லாமனெஞ் சேயொன்று சாற்றுவன்கேள்
அச்சு ரியன்மண் டலந்தாவுஞ் சோலை யணிகொடிருக்
கச்சு ரமுதத் தியாகரென் றூற்புலன் கைவருமே. ந

இந்திர சால மகேந்திர சால மெனுமுலகின்
றந்திர சாலங் கடந்தோ யெழுத்தைந்து தானெனுமோர்
மந்திர சால வரமெனக் கேயருண் வாயெனவோ
வந்திர சால வனக்கச்ச பேசனை வாழ்த்துநெஞ்சே. ச

செய்யார்கண் ணிக்கு மணிசொரிந் தேயெழில் செய்யுங்கச்சூர்
ஐயார்கண் ணிச்சடை யான்கச்ச பேச னருள்சுரந்தே
மையார்கண் ணிக்கிடந் தந்தா னரிக்கு வலமளித்தான்
பொய்யார்கண் ணின்ற வருளைச் செய் யானடி போற்றுநெஞ்சே. ரு

கலைமருந் தன்று தனைப்பாடுஞ் சுந்தரன் கண்மருந்து
இலைமருந் துங்கள் நரைதிரை மாறவீ தன்றியென்றே
அலைமருந் தைத்தந் தமரரைக் காத்த வணிகொள்கச்சூர்
மலைமருந் தேயிதில் விலைமருந் தேனென் மனத்துயர்க்கே. சு

அன்றோ ரடியவர்க் காக விரவி னடிவருந்திக்
குன்றோ வெனுமுலை யாரூர்ப் பரவையைக் கூட்டிவிட்டீர்
இன்றோர் மடந்தையைக் கூடிற் பழியில்லை யென்றனமே
சென்றோது வாய்திருக் கச்சூ ரமுதத் தியாகருக்கே. எ

## அஞ்சனாட்சியம்மன்

மச்சூ ரிலுஞ்சிறு குச்சூ ரிலுமையம் வாங்கிப்பொன்போல்
பச்சூருங் கொங்கைமின் னார்க்கே யளித்த வின்பச்சுகமிச்
சிச்சூர் பழிக்கத் திரிந்தே னினியருள் செய்கதிருக்
கச்சூரில் வாழஞ்ச னாட்சி மலைவளர் காதலியே.



## கச்சபேச்சுரர் கொச்சகக் கலிப்பா

இரணியவன் மன்பணிகொண் டின்பமளித் தீரெனக்கு
முரணியவன் மனமாகில் முத்திவரு மோவுரையீர்
அரணியவன் றழல்கடைந்தே யாகுதிசெய் சோலையினிற்
றரணியவ னடவுகச்சூர் சார்ந்தகச்ச பேச்சுரரே. க

வெவ்வாய் விடமருந்தும் வித்தகரே யென்றன்மலர்ச்
செவ்வா யமுதருந்திற் றீதாகு மோவுரையீர்
எவ்வாத் தவஞ்செய் யுமையாண் முலைத்தழும்புங்
கைவாய் வளைத் தழும்புங் காத்தகச்ச பேச்சுரரே. உ

அம்மானைச் சென்னிவைத்தீ ரருண்மானை மெய்யில்வைத்தீர்
இம்மானை யெங்குவைக்க வெண்ணிமய லாக்கிவிட்டீர்
செம்மானை யங்கைவைத்த சீமானே யென்பணிகொள்
பெம்மானே திருக்கச்சூர் பெரியகச்ச பேச்சுரரே. ௩

கண்மருந்திட் டோர்புலவன் கவிபறித்தீர் யானளித்த
பெண்மருந்துக் கேனுசைப் பெருமருந்திட் டீருரையீர்
விண்மருந்திட் டமரருக்கு விடமருந்தி னீர்புவியிற்
பண்மருவுந் தென்கச்சூர்ப் பதிக்கச்ச பேச்சுரரே. ௪

தோலுக்கோ நீரிரந்த சோற்றுக்கோ வோர்விடையின்
மேலுக்கோ வென்மகளுன் மேலாசை கொண்டதையா
மாலுக்கோர் பாலளித்து வானவருக் கமுதளித்திங்
காலக்கோ யிற்குலவு மருங்கச்ச பேச்சுரரே. ௫

ஐயரே யும்மைப்போ லாக மெலும்பானேன்
வெய்ய வடிசில் விடலானேன் வந்தணையீர்
கையில்வே தன்றலையுங் காலிலே மால்விழியு
மெய்யிலே கட்செவியு மேவுகச்ச பேச்சுரரே. ௬



## தியாகேசர் கொச்சகக்கலிப்பா

மாடேறி வந்தெனது மங்கையைமா லாக்கிவிட்டீர்
ஈடேற வீரினிமே லென்னாளும் வாழ்ந்திடுவீர்
கோடேறி மந்திகுழக் கொஞ்சிக் கனிபறித்து
ஆடேறுந் தென்கச்சூ ரமுதத்தியா கேச்சுரரே. க

வின்மலையங் கைக்கொண்ட வித்தகரே யென்முலையாம்
பொன்மலையுங் கைக்கொள்ளப் போகாதோ செல்லுகிலீர்
நன்மலைய முனிவனுர்க்கு நற்றமிழ்தந் தீர்கச்சூர்
தென்மலையில் மருந்தரெனுந் தியாகரா ஜேந்திரரே. உ

மின்னலிடை யன்னநடை வேல்விழியாள் பான்மொழியாள்
உன்னைநினைந் தேமதனுக் குள்ளுருகி வாடுகிறாள்
தென்னைவனஞ் சோலைதனிற் சேர்ந்தணைந்து கூடுமையா
அன்னவயல் சூழ்கச்சூ ரமுதத்தியா கேச்சுரரே. ங

ஓட்டுக்கா சோறுநஞ்சா யுண்பதற்கா நீண்டசடைக்
காட்டுக்காப் போரினிற்பல் காட்டியதற் காயானைக்
கோட்டுக்கா பிஞ்சுமுலைக் கோதைமய லாயினதுன்
தாட்டுக்கா கச்சூ ரமுதத்யா கேச்சுரரே. ச

மாமதிக்கு நற்குயிற்கும் வண்டொலிக்கும் பூங்கணைக்கும்
மாமதிக்கும் வேறுபட்ட மாதுதளர்ந் தாள்சர்வ
பூமதிக்கும் போற்றும் பொருவிலணங் காமனைவாய்
பூமதிக்குங் கச்சூர் புகழமுதத் தியாகையனே. ரு

பருக்கச்சூர் முலைகயற்கட் பான்மொழிவிண் ணோர்கணஞ்ச
முருக்கச்சூ ரனையவளை யுவந்தணையி லணைத்தருள்வாய்
தருக்கச்சூர் புவியிரதந் தனையிவர்ந்து புரங்கள்வென்ற
திருக்கச்சூர் வளரமுதத் தியாகேசப் பெருமானே. சு



## கட்டளைக் கலிப்பா.

விண்டோய்மதிலவர் வலியோகிலைசொல வெளிதேயலவா னிறைவாகும்
அண்டார்புரமெரி கச்சூர்வருமமு தத்தியாகேசனை யணையாநாள்
வண்டேர்குணமல ரவையோகணைகன்னல்வருகார்முகமதிக் குடையாகும்
கண்டோருயிர்நிலை டீயாரெனவிடு வதுவோ விவைமொழி கனமாதே. க

தேருமரிபிரமாவுமமரரு மிசையே வளர்நிறை திசையோரெல்
லாரும்பரவுறு கச்சூர்வருமமு தத்தியாகேசனை யணையாநாள்
ஈருங்குயின்மொழி போழும் மிளமதி யியமாமலை கட லெள்ளிதேயோ
போரும்முயிர்நிலை யாதென் றலைவிதி பொன்னுமிளமுலை மின்னரே. உ

செல்லா மளகான் னுதலார் மொழிகுயில் சேர்கா வுளதிருக் கச்சூரின்
நல்லார் பணியமு தத்யா கேசனை நானே வணைதனி லணையாநாள்
யல்லார் மதியல பாலோ விடமல ரெய்யார் விடுசர மிவையாவும்
பொல்லா ,தெனவுமெ னனையார் களபமு மொழியா ரிவையென பூமாதே.

கங்கை யும்புனற் கொன்றை சூடிய கடவு ளாதிகச் சூரரே
கொக்கைமீ தெனவந்த ணைந்தவர் கொள்கி டாதொரு காலமே
அங்க சன்கணை தென்றன் மீறுதிங் கன்னை யோவசை வீறதே
மங்கையே யமுதத்தி யாகர் வருகையைச் சொல்லுமி னன்னமே. ௪

வெள்ள நிறை சடையின்மதிப் பிள்ளைகொன்றை தும்பை மத்த வீயுங் கை[யிற்
றுள்ளுமழு மானேந்தி மாலைபுலி யதளுடையுஞ் சோதி நூலும்
நள்ளமருக் கடுகளமு நற்கிள்ளை மொழியிடமு நாளு மாரு
அள்ளல்வயற் கச்சூரி னமுதத்தியா கேச னிருதா ளணிவாஞ் சென்னி. ௫

செப்பாரு முலையு முல்லை யொப்பாகு நகையுமொளி சேர்ந்த மெய்யுந்
துப்பாரு மிதழுமயி லொப்பாரும் விழியும்வேய்த் தோளுஞ் சங்குக்
கொப்பாருங்கண்டமுமா லொப்பாரு முதரமுமொள் ளரம்பை யூரும்
அப்பாரும் வயற்கச்சூ ரஞ்சனாட் சியுனிருதா ளணிவாஞ் சென்னி. ௬

### வெண்பா.

மருந்திட்டான் றென்கச்சூர் வாழமுதத் தியாகன்
இரந்திட்டான் சுந்தரனுக் கின்றேன்—பொருந்து
மருக்கொன்றைத் தாரான் மலரடி சென்றேத்திற்
றிருக்கொன்றைத் தாரான் றெளி.

தீராத வினைகளெல்லாந் தீர்த்தருளுந் தென்கச்சூர்
சீரா ரமுதத் தியாகேசர்—தாராகப்
பாம்பணிவார் காதினார் பங்கயப்பூந் தாளிணையைத்
தாம்பணிவார்க் கின்பந் தரும்.

### அம்மானை.

வேதவகங்கொண்ட விமலரமுதத்தியாகர்
மாதங்கங்கொண்டரங்கன் வாசல்வந்தாரம்மானை
மாதங்கங்கொண்டரங்கன் வாசல்வந்தாராமாயின்
ஏதுமற்றுச்சுந்தரற்கன் றிரந்ததென்னவம்மானை
இரந்ததுவுமவரவருக் கிட்டபடியம்மானை. ௧

வரந்தருந்தென்கச்சூரில் வாழமுதத்தியாகேசர்
பரிந்துவிண்ணோர்தமக்கமுதம் பாலித்தாரம்மானை
பரிந்துவிண்ணோர்தமக்கமுதம் பாலித்தாராமாயின்

அருந்தியவூண்விடமாய் நெஞ்சமர்ந்ததேனம்மானை
அழகஞ்சனுட்சிவரை யக்கரத்தாலம்மானை. உ

நிலவணியுங்கச்சூர் நிமலகச்சபேசர்
உலவாக்கயிலை யொருவர்காணம்மானை
உலவாக்கயிலை யொருவரேயாமாகின்
பலவிடத்துநீங்காத பண்பென்னேவம்மானை
பழமறைவாய்க் கொண்டார்க்குப்பண்பன்றேவம்மானை. ரு

சீதமலர்ப்பூம் பொழில்சூழ்திருக்கச்சூர்தியாகேசர்
பூதிமலைமருந்த ரானார்காணம்மானை
பூதிமலைமருந்த ரானரேயாமாகின்
வாதங்கால்மாருத வாறென்னேவம்மானை
மாறிநின்றேவாதத்தை மாற்றினர்காணம்மானை. சு



## மட்டு விருத்தம்

கண்டமதில் விடந்தரித்தீ ரரவிணைப்பூடணம்பூண்டீர் கங்கை யென்ற, பெண்டவளைச் சடையில் வைத்தீர் பித்தனென்னுஞ் சிறுத்தொண்டன் பிள்ளைதின்றீர், பண்டுளமா ரனையெரித்தீர் பாணிதனில் மழுவைத்தீர் பலரும்போற்றத், துண்டவிளம்பிறை யணிந்தீருமையமுதத் தியாகரென்று சொல்லலாமோ.

சீரும் புனன்மதி புனையுஞ் சடைமுடி திகழும் பெருவெளியன்
ஆரும் பணிபவன் கச்சூரினிலுறை யமுதத் தியாகேசன்
தாருங் கொடுவது தேறும் மடியெனைத் தழுவா திடுமேனன்
காருஞ் சகிகுயி லோமன் மதன்முகிற் காணே னுயிர்சகியே.

திருக்கச்சூர் முலைதிளைக்கு மணிமார்பன் பணியமுதத் தியாகரே முன், திருக் கச்சூர் தனைவென்ற செவ்வேளை யினிதளிக்குந் தேவர் தேவே, திருச்கச்சூர் மலைமருந்தே வல்வினையே னெஞ்சகத்திற் றினமுநீவந், திருக்கச்சூர் புரியுமயல் நீங்காத தென்னையிது செப்புவாயே.



## விருத்தம்.

மதிக்கொழுந்தும் புனலாடச் சடையுமாட வனக்கொன்றை மலராடமௌலியாடப், பதிக்குமணிப் பதக்கமுங்கட் செவிப்

பூணுடப் பகர்செவிக்குண் டலமாடப் பனிசூழ்வெற்பி, னுதிக்கு மயிலாடமழு மானுமாட வுவமையிலா வடிவதிகண் டும்பராடத், துதிக்குந்திருக் கச்சூரர் பவனியாடல் சொல்வுமா யிரநாவாற் சொல்லலாமோ.

வருநுதலில் விழியுமனற் கையுமனல் வாயுமனல் மணிப் பூண் பாந்தள், உருகுமெயி றிலுமனலாஞ் சடையிலிராக் கதி ரனில முருக்கொண் டெங்கும், பருகியவெண் பொடியனலாங் கங்கையஞ்ச னுட்சியிரு பேத மானுர், அருமைத்திருக் கச்சூரி லுமையமுர்தத் தியாகரென்சொ லறிவிப் பீரே.

புகழ்ந்திருக்கு மாதிபுரி யொத்தியென்றாலும் புலியூர் பொ துவென்றாலும் அகந்தழைக்க விருந்திடுமூ ராரூராலு மென்ன வர்கட்கென்றே, மகிழ்ந்ததிருக் கச்சூரை மாயனுக்கோர் பொ ன்கொடுத்து வாங்கிக் கொண்ட, திகழ்ந்தவமு தத்யாக சிவ யோக வுமைபாகா தேவதேவா.



## தாழிசை.

சங்கமே யணிகை வேலையே பொழுது சங்கமே யணிகை வேலையே
சந்தி ராகலை நிலாவனே குளிர்மை சந்தி ராகலை நிலாவனே [புள்ளே
கொங்கையுந் திதலை வாய்ப்புள்ளே யெனது கொங்கையுந் திதலை வாய்ப்
கோதை வாங் குமரு மாலையே கரிய கோதைவாங் குமருமாலையே
புங்கமே வுமத னுர்விலே விரக புங்கமே வுமத னுர்விலே
பூவிடத் தினிய லன்னமே யுணவு பூவிடத் தினிய லன்னமே [மே
செங்கண் வேயுமழை வண்ணமே யழகார் செங்கண் வேயுமழை வண்ண
திருக்கச் சூருறை தியாக ரென்றன்முலை நெருக்கச் சேர்ந்தணையு முன் [னமே

சாலமே வுமிர சால நீழலுறை சங்கரன் பிரம சங்கரன்
தருமதிக்குடையன் தருமதிச் சடையன் சஞ்சலந் தவிர சஞ்சலன்
காலனஞ் சுமிரு காலனஞ் சுமணி கண்ட னெங்கணுங் கண்டனேர்
கலைக்கச் சூருறை தியாக னென்றனிரு முலைக்கச் சிந்துமரு வாதநாள்
கோலமேவுகரும் பெண்ணையே மதனன் கோலமேவு கரும்பெண்ணையே
கொண்டல்கண்டுமலர்கேதகாய்விரகங்கொண்டு வாடுமெனக்கேதகாய்
வேலைமேவிய கல்லோலமேயினியிவ் வேலைமேவியகல் லோலமே
விரையநாடுமல ரன்னமேயலை விரையநாடுமல ரன்னமே.



## ஊசல்.

---

இராகம்-புன்னுகவராளி-தோங்கல்.

ஆடவாரீரூஞ்ச லாடவாரீர் அருள்திருக்கச்சூர ராடவாரீர்
பாடவாரீரூசல் பாடவாரீர் பராபரனே தியாகேசனே பாடவாரீர்.

பூமாது வளர்கமலத் தடஞ்சேர் ந்து
பொழில் பலசூழ் திருக்கச்சூர் புனித ரோது
காமாதி யாறினையுங் கடந்த ஞானக்
கருத்தர்புகழ் தியாகையர்மே லூசல் பாட
நாமாதி றைவனுல களந்த மாலு
ளிர்மதியுஞ் செங்கதிருந் திசைவாழ் வோருங்
காமாதி னிறைவன்முரு கேசர் போற்றுங்
கருக்கடி யைங்கரக் கடவுள் காப்ப தாமே. (ஆட)

பாராதி யண்டமுதல் வீறுமேரு
பருப்பதத்தி னிடையமரர் பரிந்து வாழ்த்த
சீராரு முபநிடதக் கால்க ணட்டி
சிறப்புடைய கலையனைத்தும் பரப்பாய்ச் சேர்த்து
ஏரார்ந்த புராணமெலாங் கொடுங்கை யாக்கி
யிருசுடரு மிலங்குமணி விளக்க தாக்கி
காராரு மனையமண் டபத்தி னூடு
களிப்பினமு தத்தியாக ராடி ரூசல். (ஆட)

பகரரிய வோங்காரக் கம்பம் நாட்டிப்
படருமறி வதனையெழில் விட்ட மாட்டிச்
சகலவுயி ராய்மருவுங் கதிரை வானிற்
றயங்குமதி யவனையொளிர் கயிறாய்க் கட்டி
துகளறுநன் மனஞ்செம்பொற் பலகை யாக்கித்
தூயமறைப் பிரமன்முத லவராட்ட
அகரவுரு வாஞ்சிவனே யாடி ரூச
லமுதத்யா கேசரே யாடி ரூசல். (ஆட)

வாசவனு நான்முகனும் வடந்தொட் டாட்ட
வயங்குபொன்னுட் டிமையவரும் வடந்தொட் டாட்ட
ஏசில்முரு கேசனுநல் வடந்தொட் டாட்ட
வெங்கூள்மலர் மாதிறையும் வடந்தொட் டாட்ட

காசிபரு மத்திரியும் வடங்தொட் டாட்டக்
கருக்கடியைங் கரத்தரசும் வடங்தொட் டாட்டத்
தேசமெலாம் புகழவருந் திருக்கச் சூர்வாழ்
செயவமுதத் தியாகருவங் தாடி ரூசல். (ஆட)

கீற்றுமதியவனசைய வாடிரூசல்
கிரிமகள்பொற் றனமசைய வாடிரூசல்
நீற்றொளிரு மேனியனே யாடி ரூசல்
நீள்புயம்வாழ் பணியசைய வாடி ரூசல்
கூற்றையுதை தாளசைய வாடி ரூசல்
கொல்கரியின் றோலசைய வாடி ரூசல்
ஆற்றுதிசைப் புனலசைய வாடி ரூச
லமுதத்யா கேசருவங்தாடி ரூசல். (ஆட)

பம்பைதிமி லேமுரசு சீரெக் காளம்
படர்வீணை கின்னரிதம் பட்டங் தாளம்
கும்பநிகர் முழவுபல் லியஞ்செய் பேரி
குழைபயிலு நாகசுரங் தாரைசின்னங்
தம்புருசல் லரிவீர காள மேளங்
தடவுபறை வீராணங் துத்தி பூரி
அம்பெனகம் பலேமிகவே யாடி ரூச
லமுதத்யா கேசருவங் தாடி ரூசல். (ஆட)

பூசுரருங் தாபதரு மிமையோர் தாமும்
புனிதசிவா கமப்பொருடேர்ங் தகவி லோத
காசுடுத்தி மூலமடவா ரிரண்டு பாலுங்
கனிவினிற்பல் லாண்டிசைப்பக் கரியோன்போற்ற
நேசமுடன் மவுனியர்க ளேத்தி நிற்க
நீடுலகோ ரரகரவென் றுன்னி வாழ்த்த
வாசமலர்க் குழலஞ்ச ளுட்சி சேரு
மணியமுதத் தியாகருவங் தாடி ரூசல். (ஆட)

அந்தணர்க ளொருபாலின் மறைக ளோத
வருள்பொழியுங் தேவார மடியார் பாட
சந்ததமு மோங்காரப் பொருளை யுன்னித்
தாபதர்க ளொருபாலி னிறைஞ்சி யேத்த
கந்தமலர்க் குழலார்கள் களிப்பா யாடக்
காமமுனிங் திடுபெரியோ ராசி கூற
எந்தையே நின்னடியார் தழைத்து வாழ்க
எழிலமுதத் தியாகருவங் தாடி ரூசல். (ஆட)

மாதவர்க ணின்றொருபாற் சிறப்பா யேத்த
மன்பதைக ளோகையுடன் மகிழ்ந்து போற்ற
ஆதவனே டிந்தொருபா னின்று வாழ்த்த
வமரர்சித்த ரரம்பையர்க ணுதித்தே நிற்க
நீதிமறை யவரொருபால் கீதஞ் செய்ய
நீடுரகர் மகிழ்ந்தொருபாற் கானம் பாட
பாதிமதி யணிசிவனே பாடிரூசல்
பரவமுதத் தியாகருவந் தாடி ரூசல். (௩௮)

வாடுமுயிர்ப் பயிர்தழைப்ப வாடிரூசல்
வளர்சைவ மிகவோங்க வாடிரூசல்
நாடுபொன்னம் பலம்விளங்க வாடி ரூசல்
நாளுமடி யவர்வாழ்க வாடி ரூசல்
தேடுசிவ பதஞ்செழிக்க வாடி ரூசல்
திங்களுமும் மாரிபெய வாடிரூசல்
திகழமுதத் தியாகருவந் தாடிரூசல். (௩௯)

# திருப்பள்ளி எழுச்சி.

## கருக்கடிவிநாயகர் துதி

### வெண்பா.

தெள்ளுதமிழ்க் கச்சூர் திருவமுதத் தியாகர்மேற்
பள்ளி யெழுச்சியெனும் பாவுரைக்கக்—கொள்ளும்
மருக்கடி யைம்பூவின் மதனெரித்தோ னீன்ற
கருக்கடியின் மாமுகனே காப்பு.

### விருத்தம்

நீர்கொண்ட தாமரையு நின்முக மலர்ந்ததென
நிறைவாமி தனின் மலர்ந்த
நின்றாள்கள் கண்டவடி யார்மல மகன்றதென
நீள்கங்கு லேயகன்ற
வார்கொண்ட நின்சடா மகுடமென வுதயகிரி
வந்திர வியுமு தித்த
வளரிளம் பிறைநின்க ணுற்றவெளி தென்னவெவ
ரவர்வெளுத் திட்ட சுடரும்
ஏர்கொண்ட நின்னடிய ராகரத் தொனியெனவு
மெழில்புள் ளியம்ப லுற்ற

தேயநின் மலையின்வா ரணமுமில் வாரணமு
மெங்கணு மழைக்க வுற்ற
தார்கடலி னஞ்சுமணி கண்டகச் சூரனே
யாதியே பள்ளி யுணராய்
யழகஞ்ச ஞட்சிமகி ழமுதத் தியாகனே
யண்ணலே பள்ளி யுணராய்.

௧

குன்றிவைகள் மாளிகைக் கொடியீது வான்கங்கை
குலவுதரு மலரீ துடுக்
குவிமுலையின் மாதர்நடை யீதென்ன நடைகன்னல்
கோக்கமுகு விது வமரர்தாங்
துன்றுதார் மானிடர்க ளிவைமலைக் கொண்முவிவை
தும்பியிவை யூடன் மாதர்
துவரிதழ் வெறுக்கநற் கலவியி லிளைத்தநற்
றேகையர்க ளிவை சித்திர
மன்றுகணி கையரிவர்க ளாடையிது தூமமென
வவனித் தலந் தெளிந்த
தையவொரு வற்கொருவர் முகமுந்தெரிந்ததினி
யாகிலு மனந்தல் தெளிவா
யன்றமர ருக்கபய முதவுகச் சூரனே
யாதியே பள்ளி யுணரா
யழகஞ்ச ஞட்சிமகி ழமுதத் தியாகனே
யண்ணலே பள்ளி யுணராய்.

௨

'மால்பிள்ள நம்பிரமன் வெண்கரியின் மகபதியு
மயிலினறு முகன குவின்
வருமைந்து கரனிடப மீதிலீ சானன்
வருகனலி யாடு நடுவன்
கால்கொண்ட கான்மேதிநிருதிதண் டிகைவருணன்
கராவாயு கலைகுபேரன்
கருதுபரி யிரவிரத முஞ்சசி விமானமெக்
கடவுளுந் தந்த மூர்த்தி
சேல்கொண்ட கன்மாத ரோடுகூர் மக்குளத்
தினிலாடி நினது சேவை
செய்ய யொன்றளியுற்ற தையனின் கடைக்கணைத்
திறந்துபார்த் துதவல் செய்கல்
லால்கண்ட நால்வர்கின் னடிகண்ட கச்சூரி
லாதியே பள்ளி யுணராய்
அழகஞ்ச ஞட்சிமகி ழமுதத் தியாகனே
யண்ணலே பள்ளி யுணராய்.

௩

ஒப்பிலா வச்சனக னுஞ்சனந் தரனுமிறை
யொவ்வாஞ்ச ளுதரனு மிங்
குவமையெங் கணுமிலாச் சனக்குமா ரனுநின்னை
யோவது தன்ம வர்த்த
மெப்புவி யினும்புழு நற்காம மோட்சமந்த
யேவின வுவந்து கல்லா
லின்னீழ லுற்றுநின் நல்வரவு பார்த்துமே
யேக்கறவு கண்டு மடியா
ருப்பிணெலி யெனநின்னை யேற்றிடுவ தோருநின்
னொளிமுக மலர்ந்து நின்று
லுவரிபோ லுங்கருணை பொழிகின்ற காலமிது
வுமைபங்க விடப துங்கா
அப்புநிறை வயற்றிருக் கச்சூரில் வாசனே
யாதியே பள்ளி யுணராய்
அழகஞ்ச ளுட்சிமகி ழமுதத்தி யாகனே
யண்ணலே பள்ளி யுணராய். ௪

நின்கடைக் கண்ணேக்க மாரிடத் தருளினு
நேருற வளிப்ப தற்கு
நேமியோன் பூமாதை விதிகல்வி மாதினை
நீள்விசும் பரிதா ருவை
உன்றுணைத் தொழுநிருதி தீயினை வசிட்டனு
முயர்காம தேனு தன்னை
உறவெனச் சொல்லநின் மருங்கினி லுறைந்தனர்க
ளுன துநடை தியாக னென்றே
தென்றல்வர நற்கோங்கு புன்னைசுர புன்னை
செண்பகமல் லிகைப்பூ வினற்
றிரடாது தரைநிறைய பொன்னுல கெனக்காட்டு
செல்வநக ரானமாத
ரன்னமென் நடைகாட்டு மணிகொள்கச் சூரனே
யாதியே பள்ளி யுணராய்
அழகஞ்ச ளுட்சிமகி ழமுதத்தி யாகனே
யண்ணலே பள்ளி யுணராய். ௫

முன்னாளி னிற்கயிலை தனிலுமைக் கையமுற
மூடியகண் ணுடன் விடுப்ப
மூதண்ட மும்மிருள் பரந்துநெறி யாவர்க்கு
முறைபிசக லுற்றதறி வோம்
நின்னுதி முச்சுடரு நினதுநோக் கென்றுமறை
நீடித்து ரைத்த தறிவோம்

நீயுறங் குகைச்சரா சரங்களும் விழிதுயில்
நினைவுற்ற தென்றுமறி வோம்
என்நாளு மெவ்வுயிரு மேயுறங் குதலுன்னை
யெய்திநல் யோக மடைய
வென்பது மறிந்துளோம் நீயினிக் கண்வளர்கை
யியல்பன்று தேவ தேவே
அந்நாளில் விடமுண்ட வித்தகச் சூரனே
யாதியே பள்ளி யுணராய்
அழகஞ்ச ளட்சிமகி ழமுதத்தி யாகனே
யண்ணலே பள்ளி யுணராய். ௬

வானாட்டி னமரர் கின்னரர் சித்தர்பன்
னகர்கருடர் காந் தருவரும்
வல்லுநே ரொத்தமுலை மங்கைய ருடன்வந்து
மகிழ்ந்துநின் னுடல் காணத்
தேனாட்டி யுண்ணும்வண் டெனவந்து துன்னிநின்
றிருக்கோயின் மன்னி யுற்றார்
திங்களென வதனனே செஞ்சடைப் பாரமிசை
சேற்கண்ணி வைத்த பரனே
பானாட்டு மொழியுமைக் கண்பார்வை செய்யவும்
பங்கசன் சதி சொல்லவும்
பதுமநா பன்முழ வடிக்கவு நின்றிருப்
பாததா மரையாட வும்
ஆனாட்டு பாகனே யணிதிருக் கச்சூரி
லீதியே பள்ளி யுணராய்
அழகஞ்ச ளட்சிமகி ழமுதத்தி யாகனே
யண்ணலே பள்ளி யுணராய். ௭

தோரண நெருங்குகூ டலில்மண் சுமந்ததுந்
தொல்லரச னேய டிக்கச்
சுவடுண்ட தும்விசயன் வில்லினி லடித்ததுந்
தொண்டனது செங்கல றையும்
வாரண மருப்பென்ன முலைகங்கை யானுமை
வைத்துச் சுமந்த நிலையும்
வன்றொண்ட னுக்குவெயி லென்றுபா ராமலே
மனைதொறு மிரந்திட் டதும்
தாரமொரு பங்கனென நினையறிந் தும்பரவை
தன்னிட நடத்து தூதும்
தற்றமதி லேயுற்ற நின்னிளைப் பும்மெய்த
தளர்ச்சியும் பாரா மலே

ஆரண முழங்குகச் சூரினுறை கடவுளே
யாதியே பள்ளி யுணரா
யழகஞ்ச ஞெட்சிமகி ழமுதத் தியாகனே
யண்ணலே பள்ளி யுணராய். ௮

எண்ணமுறு மாதியாஞ் சைவர்வை தீகர்நல்
லெழிலரசர் வணிகர் பின்ன
ரேய்ந்தநாற் கவிவாணர் கருணிகர் காவலர்க
ளெழினிமங் தங்க ணிகைமார்
பண்ணையுறு வாத்தியத் தொழிலர்கட் டியக்காரர்
பஞ்சகஞ் சுகத்தர் யுத்தப்
படைபயிலு வோர்தனிப் பாரபத் தியக்காரர்
பகர்கொடிச் சீலை குடைகள்
நண்ணருகு தீவட்டில் சவரிசா மரைகுஞ்ச
நல்விசிறி யோர்கள் கண்டு
நாராய ணன்றொழுங் கடவுளே பவனிக்கு
நன்கினி லமைந்து வந்தா
ரண்ணல்கச் சபப்பூசை கொள்ளுகச் சூரனே
யாதியே பள்ளி யுணராய்
யழகஞ்ச ஞெட்சிமகி ழமுதத்தி யாகனே
யண்ணலே பள்ளி யுணராய். ௯

பண்டாரங் கன்னென வழக்கினிற் கயிலைமலை
பாம்புபுலி பார்க்க நல்ல
பாவாணர் புகழ்சிதம் பரங்காளி வாதுபதி
பரிவதினின் மாங்க னியன
முண்டியென வமையிட்ட வ்வர்தமக் காலை
யொன்றான்றி யொன்றெ டுத்தோ
ருயர்பதியு மீதலா லெப்பதியி னுடனு
மோரொரு வருக் கென்னவே
வெண்டைரங் கன்சரா சரங்களுங் களிகூர
வேணுமென நின்னு டலை
விரும்பியிப் பதியுற்று நின்சமய மறிகின்ற
வேலையிது நல்ல வோரை
யண்டர்துதி கச்சூரில் வளர்கின்ற கடவுளே
யாதியே பள்ளி யுணரா
யழகஞ்ச ஞெட்சிமகி ழமுதத்தி யாகனே
யண்ணலே பள்ளி யுணராய். ௧௦



## அதிசயப் பத்து

தண்மதியி னிளங்கொழுந்துந் தும்பைகொன்றை யறுகினிளந் தளிரும் வானின், வெண்ணதியு மகுடமிசை கரியினுரிப் போர்வையுநல் வெங்கைம் மாவின், வண்ணவத ளுடை மறைத்து வாழமுதத் தியாகன்றன் மனையை நாடி, யண்ணறிருக் கச்சூரின் வழிவந்த வதிசயத்தை யாங்கண் டோமே. க

மாமதியும் வெய்யோனுங் கனலுமெனுங் கண்ணுடையான் வலிமை யென்பைத், தாமணியு மாலையினு ளுமைவெரி னெடுவராகத்தின் கொம்புஞ், சேமமுற மறைத்தமுதத் தியாகனெளி தாகிப்பா துகையினேறி, யாமையரி பூசைசெய் கச்சூர்வந்த வதிசயத்தை யாங்கண் டோமே. உ

சொன்னமெனும் வடிவுமெழின் மின்னலெனுஞ் சடைமுடியுந் துலங்கு நீறு, மன்னநடை யுமையிடமு மக்கமணி வடமுமரவாகுங் கச்சுந், தன்னடியன் பசிதீர வந்துவிருந் திடுமமுதத் தியாக ஞர்தா, மன்னமிடுங் கச்சூரின் வழிவந்த வதிசயத்தை யாங்கண் டோமே. ங

செய்யவிடப்பாகமது தேவியுமை யாள்விளங்கத் திகழுமெய்யன்
அய்யன்மால் பிரமனடி முடியுங் காணு வண்ண லான
மெய்ங்கிறைய நீறணிந்த வமுதத் தியாகன் விரும்ப வெங்கள்
அய்யன்றிருக்கச்சூரின்வழிவந்தவதிசயத்தையாங்கண்டோமே.

திறமடியா ரகம்வேதஞ் சரித்திரமூ வாருகச் செப்பு நூலிப், பிறவிதனை மாற்றிடுமெம் மூவர்கவி வாசகநற் புனல்மண் மூர்த்தி, உறையமுதத் தியாகனடி யான்குடிலிற் றிட்டைதனி லுறைந்து மேவி, அறம்வளர்க்குங் கச்சூரின் வழிவந்த வதிசயத்தை யாங்கண் டோமே. ரு

செப்புகையின் மான்மழுவுஞ் சூலமுநற் றமருகமுஞ் செய்யமார்பி னெப்பரிய முந்நூலு முரகமணி கங்கணமு மொளித்துச் சென்னே, இப்பொழுது நீங்கிவந்தா மெனவமுதத் தியாகன்றூ னினிதாய்ப் பேசி, அப்புவயற் கச்சூரின் வழிவந்த வதிசயத்தை யாங்கண் டோமே. சு

காசினியின் மாப்பிட்டு வம்மைகனி கண்ணப்பர், கருத்தா யூட்டுன், பேசிலரி வாட்டாய ரரிசிவடுக் கடலின்விடம் பின்னுங்

தொண்டர், நேசநிவே தனங்கொளமு தத்தியாகன் சாப்பிட் டோம் நிசமா யென்று, ஆசினிசேர் கச்சூரின் வழிவந்த வதிசய த்தை யாங்கண் டோமே. எ

தன்நெற்றிக் கண்ணங்கி கையின்மழு மதனெரித்த தபன மாடு முன்னரிங்க மாஞ்சுடலே மூன்றாரும் வெந்தவரி முனிவர் மூர்த்தி யின்னதெலா மிருக்கவமு தத்தியாக னழற்கேட்டு மினிய பேசி யன்னவயற் கச்சூரின் வழிவந்த வதிசயத்தை யாங்கண் டோமே.

தன்னுரிய விற்பொன்னே சுந்தரர்க்கு வேணுமெனத் தான் வைப்பொன்னே, முன்னடியார் படிக்காசுக் காம்பொன்னே தோழன்வை மூலப் பொன்னே, பொன்னிதெனக் கொடுத்த வமு தத்தியாகன் வெண்டை ரங்கன் பூரிக் கத்தான், அன்ன நெல்லிக் காயளவாக் கச்சூர்வந்த வதிசயத்தை யாங்கண்டோமே

கம்புதிருக் கையோனும் விதியுமறி யாக்கடவுட் கருதா ரூ ரை,வெம்பெரிசெய் தோன்சனக ஞதியற்கு நான்மறையும் விரித் துச் சொற்ருேன், செம்பவள வாய்திறந்து திருக்கரத்தாற் றளிக் காட்டிச் செல்வோ மென்றே, அம்புவியோர் புகழ்திருக்கச் சூர் வந்த வதிசயத்தை யாங்கண் டோமே. கo



## அறிவுறுத்தல்.

மக்கடான் பெண்டிர்தான் கிளைக ணல்ல பொருள்வீடு வாசல் கேளும்
மக்கடா யொன்றுதவாத் தென்கச்சூர் மேவிவள மன்னு வீரால்
அக்கடா வேறிநமன் வரிலமுதத் தியாகன்வந்தே வவனை யோட்டி
அக்கடாவெனப்பயமற்றிருக்கவைத்துமின்னுமவனுட்கொள்வானே. க

இக்கடா வெனமொழியை மாதர்தமக் காட்பட்ட வேழையீர் காள்
புக்கடா வித்திரியு மால்பிரமன் போற்றுகச்சூர் பொருந்து வீர்மே
திக்கடா வேறிநமன் வரிலமுதத் தியாகனெனச் செப்பு முன்றென்
றிக்கடா தெரியாம னல்லோட்டம் பிடித்திடுவன் றெருளுவீரே. உ



திருக்கச்சூர் ஆலக்கோயில்

# தாய்மகள் வினாவிடை.

## விநாயகர் துதி.

### நேரிசை வெண்பா.

வீறுதிருக் கச்சூரில் மேவமுதத் யாகர்புகழ்
வீறுமொரு தாய்மகளை வினாவுதற்கு—விறுஞ்
செருக்கடி வினயகனமேற் செல்வன் மருகன்
கருக்கடி விநாயகனே காப்பு.

### கலித்துறை.

சிங்கார மேவு திருக்கச்சி மாநகர்ச் சேர்ந்தவர்க்கு
மங்காத செல்வமும் வாழ்வுந் தந்தாளும் வரதரெங்கள்
கெங்காத ரேச ரமுதத் தியாகர் கிருபைகொண்டே
சங்காநற் றாய்மகள் தன்னை வினாதலைச் சாற்றுவனே.

### அகவல்.

திருவளர்பாலிச் செழுந்தொண்டைநாட்டில்
மருவளர்காஞ்சி மாநகர்தனக்கு
நேர்கிழக்காக நிகழ்த்திருகாதஞ்
சேர்தருமெல்லையிற் றிலகமஞ்சாடி
செண்பகஞ்சந்தனந் தேக்கொடுகுருந்தந்
தண்பலாவாசினி தாதகிமுன்னங்
கோங்குமந்தாரங் குராமராவில்வம்
வேங்கைகமாவசோகு வேழம்புன்னகம்
பாதிரிதமாலம் பனைதேவதாரஞ்
சாதிவேய்சிந்தூரஞ் தாடிமங்கோளி
போதிகாயாமகிழ் பூகதமாழை
மாதவிசெச்சைதே மாவுதியிருப்பை
வஞ்சிசம்பீரம் வழையகில்நமையாண்
கொஞ்சியர்விரையொரு குறிஞ்சிவெட்பாலை
மருதோமைகாஞ்சிரை வாகைநீர்க்குண்டில்
சரளமாச்சாவேல் தாழையேகாஞ்சி
யிலவங்கம்பூம்பிடா வில்லங்கர்ப்பூரம்
அலாதங்குகுங்கும மாத்திமுந்திரிகை
சோதிமாமரமுதற் றுன்றியவனமாய்
ஏதமில்கூர்ம புரியெனும்பெயர்கொள்

தனத்திருக்கச்சூர் மலையடியதனில்
கனத்தகல்லாலடி காதலித்திருந்து
சனகர்முன்னுந்தவர் தாங்கணால்வர்க்கு
மனநிலைகூரு மறைப்பொருளுணர்த்தி
திருநெடுமாலினுக் கொருபுறமளித்து
முருவியவுமைக்குடல் வடுவினைமறைத்து
அண்டர்யாவருக்கு மமுதினையளித்தோர்
தொண்டருக்காகவே சோறிரந்திட்டு
கண்மருந்திட்டவன் கவியமுதருந்தி
தண்ணளியுடன்விடந் தன்னையுண்டமரர்
பயமெலாந்தீர்த்தொரு பார்ப்பனிமூகை
யயர்வினைநீக்கியோர் யக்ஷனுக்கருளி
அருமறையவன்பிர்ம கத்தியைப்போக்கி
யிரணியவர்ம னியற்றுபொற்கோயில்
மண்டபமேடை மணிநெடுவீதி
கொண்டல்கண்படுக்குங் கோபுரவாயல்
விண்டொடுபுரிசை விமானமுப்பரிகை
தண்டலைசெய்குன்று தாமரைப்பொய்கை
இன்னவைபலவு மியற்றிநித்தியமும்
மன்னுநைமித்திக மாதங்கடோறுந்
திருவிழாமுதலவன் செய்பணிக்குவந்து
மருவியாலக்கோயில் வாழ்கச்சபேசன்
கஞ்சநாட்போதிற் கவின்பெறுபாதன்
அஞ்சனாட்சிக்கிட மருளியநாதன்
அண்டனுதன்மறை யாரணநாதன்
வெண்டலையாரரங்கனுள மேவியநாதன்
பூதநாதன்மிகு புராதனநாதன்
ஆதிநாதன்னமு தத்தியாகநாதன்
அங்கவன்றன்னெழி லனைத்தையுநோக்கி
தங்குமுன்தவத்தால் தனிமயலாகி
அன்னகர்தனில்வா ழரிவையர்தமிலோர்
கன்னிமாமலர்சேர் கருமுகிற்குழலாள்
தண்பிறைக்கொழுந்தே சமானமாநுதலாள்
பண்புறமதனன் பரியவிற்கணைகள்
இருபுருவத்தோ டிருவிழியெனவே
திருமுகத்திலங்கச் செய்திடுஞ்சதுரி
கண்டவர்மனமுங் கண்களும்வாங்குந்
துண்டமெட்பூவெனத் தோன்றியவிதுரி
தொண்டையுந்துகிருந் துணைமுருக்கிதழுங்
கொண்டிடுமிலவமு முண்டெனுமிதழாள்

# திருக்கச்சூர் ஆலக்கோயில்

கண்டுடன்றேன்பால் கலந்தனசொல்லாள்
வெண்டரளத்தேர் மேவுவெண்பல்லாள்
கண்ணாடிசாணை கபோலத்துக்கோதாள்
பண்ணாரும்வள்ளை பழித்திடுகாதாள்
தாமரைமுகஞ்சரி யாமெனவழுத்தாள்
காமுறுகமுகிது வாமெனுங்கழுத்தாள்
ஏந்தொழிற்றோள்கரும் பிணையெனவையாள்
காந்தளையேளனங் காட்டியகையாள்
கச்சிற்பணைத்துக் கனத்தடிபரந்து
நச்சிடுமிளையவர் நல்லுயிர்துறந்து
சாலவனக்கரி தந்தத்தைக்கொய்து
நாலிளநீர்களை நற்கொலைசெய்து
கோங்கரும்பினைவண்டு கோதிடவிடுத்து
பூங்கரும்பனமுடிப் போர்வையுந்தடுத்து
கூர்மகுண்டத்திடைக் குலவியகுமிழியும்
தாமரைமொட்டுடன் சக்கரவாகமும்
அவிழ்தமால் வரையுநே ராமெனவெழுந்து
சவிபெறுசந்தனந் தார்பலதழைந்து
புனுகுசவ்வாதினைப் பூசிடத்திகழ்ந்து
ஒழுகொளிமுத்தார ('மாங்கிடமகிழ்ந்து
மதன்கொடிவார்சிலை மலர்க்கணைதாங்கி
விதம்பெறுபாளித மேலெங்குமோங்கி
மார்பிடங்கொண்டு வளரிளமுலையாள்
சீர்பெறுமுதரஞ் செழித்தவாலிலையாள்
வண்டொழுங்கெனவே மயிரொழுங்குடையாள்
கொண்டல்சேர்மின்னுங் கொடியுநேரிடையாள்
வண்ணமேகலைகள் மருங்கினிற்கட்டி
தண்ணியவல்குற் றயங்குபொற்றநட்டி
குலவியவரம்பையைக் குறங்கெனவிதிப்பாள்
அலவன்முழங்காலுக் காமெனமதிப்பாள்
கணைக்கால்வராலிது காணெனச்சொல்வாள்
இணைப்பரடேதரா சென்றதைவெல்வாள்
பூந்தாமரைப்பதம் போன்றிடுந்திருவாள்
மாந்தளிர்போலெழில் வாய்த்திடுமுருவாள்
அன்னமும்பிடியு மடுத்திடுநடையாள்
துன்னியநறுமலர்ச் சோலையிற்புகுந்து
மாமலர்கொய்திட வைகலுந்தனது
தெமொழிமாருடன் சேர்ந்தவணிருந்து
சுனைவியந்தாடியுந் தூய்மலர்கொய்தும்
வனைமலர்ப்பூங்கொடி வல்லியும்நாடியும்

சிலம்பெதிர்கூவியுஞ் செழுங்கனி நுகர்ந்தும்
பலம்பெறுசெய்குன்றின் பந்தினையடித்தும்
பற்பலவளிங்களைப் பார்த்திடவேண்டி
பற்பலவிடந்தொறும் பாங்கியரேகத்
தான்றனித்தெழுந்தொரு தண்மலர்க்கொன்றை
தோன்றிடக்கண்டதன் சூழலிற்சென்று
மருவமுதத்தியாகர் வலையினிற்சிக்கி
குருமணிமேகலை கோல்வளைநழுவி
அங்குறைகொன்றைநே ராகியதேமல்
கொங்கையெலாமிடங் கொண்டதுபடர்ந்து
சித்திரம்போலத் திருமுன்நிற்ப
அத்தனுங்கட்கடை யாலருள்புரிந்து
கூடியநன்னலங் கொண்டுநித்தலும்போய்
நாடியகளவினில் நன்மணம்பூண்டு
மெய்யொருவிதமாய் விழியொருவிதமாய்
தையலாருடன்பின்பு தான்வந்துகூடி
வளமுறுமனையிடை வந்திடுமளவி
னிளநிலாநகைதனை யின்றவளுணர்ந்து
என்மகளேகருத் தேயொருவிதமாய்
தேன்மொழியொடுநிற் செய்கையோர்விதமா
யுற்றதென்சொல்வே ணேதுவாள்வினவியே.

## திபதை

நீர்பூத்தமேகமெனநெருங்குகுழல்சரிவதேது மகளே - கச்சூர்
நேசர்கயிலாசர்ப்பரமேசர்கச்சபேசரணைந்தாரோ அம்மா
தேர்பூத்ததென்னமலர்செழுங்கொன்றைமலர்பறிக்கப்பேனேன் தாயே
கனி - சிக்கியதின்மிக்கபகைதீர்ந்ததனுற்சோர்ந்ததடி தாயே
திங்களினெற்றியின்மேற்சிந்தூரங்கள்சிதைவதேது மகளே - கச்சூர்
செல்வரணிவில்வர்மலைவில்லருனையில்விலணைந்தாரோ அம்மா
மங்கையரோடேழுநிலைமாடமிசைக்கூடிவிளையாடக் கதிர்
வந்துபகைதந்ததெனமாறியதைநூறியது தாயே
பட்டமணிநெற்றியின்மேற்பொட்டியவேரரும்பியதென் மகளே - கச்சூர்
பாதிரிக்குமேலானபலவிடத்தாரணைந்தவிதந்தானே அம்மம்மா
திட்டமலைச்சாரலிலேசேடியரைக்கூடிவிளையாடிக் கழை
சிந்துமுத்தைப்பந்தயமாய்த்தந்திடவேர்வந்ததடி தாயே
கருங்குவளைபோன்றவிழிசெங்குவளையானதென்னே மகளே - கச்சூர்
கவினமுதத்தியாகர்தனைக்கலந்துபரிசெய்தவிதந்தானே அம்மா
நெருங்குமலர்க்காவினிலேநீண்டபுன்னைக்கிளையைவளைத்தேன் அதி
னீலவண்டுமலர்த்துகளைநிறைந்துருப்பச்சிவந்ததடி தாயே

பொன்பவளவாயிதழிற்பொருந்தியபற்குறியேது மகளே - கச்சூர்
பூதகணநாதருனையாதரவிற்கோதியணைந்தாரோ அம்மா
என்பவளப்பாவைகளையிருகையினுலெடுத்துமுத்தங்கொடுத்தேன் - பகை
யென்றறியேன்கன்றிடமூக்கொன்றபதிந்தொன்றியது தாயே
வாடாதசெங்குமுதவாய்மொழிகள்தவறுவதேன் மகளே - கச்சூர்
வள்ளலவர்கள்ளிருளிற்கள்ளமதாய்ப்பள்ளியணைந்தாரோ அம்மா
சோடானபாங்கியுடன்சுடும்பாலையானருந்தும்போதி னுக்கை
சுட்டுப்பகையிட்டதனுற்சொற்றவறிப்போகுதடி தாயே
அத்தியின்கொம்பாற்கடைந்தவங்கைவளைநெரிந்ததேது மகளே - கச்சூ
ரண்ணியமைக்கண்ணியிடத்தன்னலுனைநண்ணியணைந்தாரோ அம்மா
மைத்தடங்கண்ணுருடனேவனசமலரோடையினிற்பறித்தேன் - கொடி
மாட்டியதிற்பூட்டியிகல்காட்டிநெரித்துடைத்ததடி தாயே
கச்சணிந்தகுச்சுமுலைக்கச்சறுந்துவிம்மியதேன் மகளே - கச்சூர்
கச்சபம்பூசித்தவண்ணல்கைச்சரசமாகியணைந்தாரோ அம்மா
மெச்சுமடவாருடன்போய்வெற்பினெதிர்யான்கூவும்போதில் அந்த
வெற்புமெதிர்கூவுதலின்அற்புதமாய்விம்மியது தாயே
மயிலடிபோலேநகங்கள்வார்முலையிற்பதிந்ததேது மகளே - கச்சூர்
மாட்சியஞ்சனுட்சியிடத்தாட்சிமணவாளனணைந்தாரோ அம்மா
வெயிலிலிளநீர்குடிக்கவேண்டியதைக்கிண்டியிதழ்வாய்விட்டேன் - தவறி
விழுந்துகண்கள்மூன்றுமுலையூன்றிவடுச்செய்ததடி தாயே
மலையனையமுலைதுயலுமணிவடங்களற்றதேது மகளே-தென்கீழ்
வடமலைவாழ்நரகரிக்குவடமலையானணைந்தவிதந்தானே அம்மா
ப்லமடவாருடன்பதங்கள்படித்துமெல்லப்பிடித்துப்பந்தையடித்தேன்
எதிர் - பாங்கியெறிந்திடமுலைமேற்பட்டுதிர்ந்துவிட்டதடி தாயே
திருக்கொன்றைத்தார்போலதேமல்முலைபடர்ந்ததென்னேமகளேகச்சூர்
தேக்குமறைவாக்கியிருள்நீக்கியுன்பர்நோக்கியணைந்தாரோ அம்மா
மருக்கொண்டகஸ்தூரிமஞ்சளுங்கோரோசனமும்பூசித் தோழி
மாருடனேயவிழ்தநன்னீராடலும்பொன்னிறமாச்சுதடி தாயே
செம்பஞ்சிசூட்டியபொற்சீரடிகள்சிவந்ததேது மகளே - கச்சூர்
சிவனையணைந்திடமலைமேலவனைநினைந்தேறியதுதானே அம்மா
பைம்புனத்திற்பிடித்தகிள்ளைபசித்திருக்குதென்றுவிரைந்தோடி - கொய்
யாப் பழம்பறிக்கநரசிங்கர்பதிக்கேகிசிவந்ததடி தாயே
மாந்தளிரைப்போலிருந்தமாமேனிதுவண்டதேனே மகளே-கச்சூர்
மைத்துனர்க்கோர்பாலருளுமலைமருந்தரணைந்தவிதந்தானே அம்மா
பூந்தருவினிழலிலேபுன்மயில்கள்நடமாடக்கண் டெதிரே
போயாடியாடியதிலோய்வாகவாடியது தாயே
நன்னயமதாய்நடக்குநடைதளரநடப்பதேது மகளே - கச்சூர்
நரசிங்கன்றங்கைமைக்கணுயகியோர்பாகரணைந்தாரோ அம்மா

தென்னவனச்சோலையிலேசிறகன்னம்பறவாமல்நடப்ப கிட்டச்
சேர்ந்துமனதோர்ந்ததன்பின்போர்ந்துநகைசேர்ந்ததடி தாயே
மதிமயங்கிடமதலையைமார்மீதிலணிவதேது மகளே-கச்சூர்
வாழமுதத்தியாகருணைத்தாழ்வறவிப்போதிலணைந்தாரோ அம்மா
முதிர்கரையிற்றுகிலைவைத்துமுழ்கியெழிற்கூர்மகுண்டத்தெழுந்தேன்
முன்னொருவன்வரநாணிமுகதலையுள்ளுடுத்தனடி தாயே
பாலுடன்செஞ்சாலியன்னம்பார்க்கில்விடமாகியதேன் மகளே-கச்சூர்
பண்மறைவிண்டருளுமண்டர்பிரானணைந்தவிதந்தானே அம்மா
சாலவனத்தேனுடனேசமைத்தவள்ளிக்கிழங்குபிசைந்துண்டேன் அது
தான்மதக்கமாகியன்னமேல்விருப்பமற்றதடி தாயே
சாலவனத்தேதினமூர்தான்றனியேபோவதேது மகளே-கச்சூர்
தரம்பெற்றசுந்தரருக்கிரந்திட்டநாதரணைந்தாரோ அம்மா
ஞாலமெல்லாம்புகழவிழ்தநாதன்மலைமேற்பலவொன்றுண்டு அது
நான்போனவேளையெல்லாந்தேன்சுளைதந்தளிக்குதடி தாயே
மார்மூலைமீதேதுயில்வாய்மறந்துதனித்துறங்குவதேன் மகளே-கச்சூர்
வாணர்நிருவாணர்கம்பவாணர்மறைவாணரணைந்தாரோ அம்மா
வேரிமதன்விழாவிசைக்கும்வேனில்மிகவுட்டணமானதனல் உடல்
வெந்துபுழுங்கும்மதனால்வேறுதனித்தேதுயின்றேன் தாயே
பேயுமுறங்குமிருளிற்பேதையுறங்காததென்னேவுரையாய்மகளே-கச்சூர்
பித்தர்சென்னிமத்தரெங்களத்தருணநத்தியணைந்தாரோ அம்மா
கோயில்நந்திமத்தளமுங்கூர்மகுண்டத்தேதவமும் சங்கு
மிக்ககோஷிக்கையாலிரவிற்கூர்துயிலைமறந்தனடி தாயே
மேற்கெழுமூன்றும்பிறைக்குன்மென்கரங்கூம்பாததென்னே மகளே-கச்
சூர் - வேலருக்குந்தாலடிவிஞயகர்க்குந்தாதையணைந்தாரோ அம்மா
கோற்றொடிப்பாங்கியரவிழ்தகுலமலையின்மேலுலவித்திரியுங் கரிக்
கொம்பென்றூர்யானுமதைநம்பிக்கூப்பாதிருந்தேன் தாயே
ஆலநிழற்கீழ்வளருமக்கொன்றைமுடித்ததேது மகளே-கச்சூர்
அந்தரங்கன்மைத்துனன்றானந்தரங்கமாகியணைந்தாரோ அம்மம்மா
மூலலிங்கத்தாண்டவனைமாலையிற்சேவித்திடநான்போனேன்
முடித்துபூசைமறைப்படித்தவொருவிருத்தரென்கையளித்தனர்காண் தா
நானணிந்தபணிகளெங்ஙுநல்லணிவேற்றணிந்தவர்யார் மகளே - கச்சூர்
நாட்டிலவர்க்கேகொடுப்போம்நமக்கொளியாதுண்மைநவில்வாயேஅம்மா
தேன்மொழியாருடன்வனத்திற்செழித்தவல்லிக்கொடியூசலாடக் கரி
சினத்துவரத்தடுத்தமுதத்தியாகரணைந்தணிந்தனர்காண் தாயே

## கோச்சகம்.

என்றுமகள் பயந்துரைப்ப வீன்றதாய் கேட்டதனைத்
தன்றுணைவ னுக்குரைப்பத் தாதை மகணினைவறிந்தே

நன்றிதருந் திருக்கச்சூர் நல்லமுதத் தியாகருக்கே
மன்றல்புரிந் தென்னுளு மனமகிழ்ந்து வாழ்ந்தனரே.



## சுவாமி அஷ்டகம்.

மாயனுமலர்ப் பாயனுஞ்சசி நேயனும்பணி தூயனே
சேயனேமறை வாயனேகயி லாயனேநட ராயனே. க

ஆசையாலுனைப் பூசைசெய்பவ ராசைதீர்த்தரு ளீசனே.
தேசனேயுமை நேசனேமருந் தீசனேகச்ச பேசனே. உ

இலங்கைமன்னவன் கலங்கிமனமுடல் மலங்கிமலையடி விலங்கவே
வலங்கொள்பெருவிரல் குலுங்கவூன்றிய நலங்கொள்கச்ச பேசனே. ங

கண்டுநேர்மொழி கொண்டமாதமைக் கண்டுநினதருள் கண்டிலேன்
கண்டனென்மத கண்டனெம்மணி கண்டனேகச்ச பேசனே. ச

அரங்கன்மனந்தனை யரங்கமெனவுறைந் திரங்கிவரந்தரு துயங்கனே
புரந்தரனுமல ரிருந்தவனும்பணி நிரந்தராமலை மருந்தனே. ரு



## அம்மன் அஷ்டகம்

தாட்சியறவர மாட்சிபெறவருள் தாட்சிமலமினி தாட்சலே
காட்சிக்கினியகா மாட்சியேகச்சி யாட்சிபெறுமஞ்ச ணுட்சியே. க

பாருலகுமிமை யோருலகம்பணி யாருலகம்பணி பாவையே
போரகலுமரி கூர்மநகருறை பூவையேயருள் சேவையே. உ

மாகனகமணி மேடையும்பல கோகனகமுமல ரோடையும்
பூகனகமலர்ப் பொழிலுந்திகழ்கச்ச புரியில்வாழு மைக்கண்ணியே. ங

மண்ணிலேதுதி பண்ணியேயுனை யெண்ணியேபத நண்ணுவோர்
கண்ணிலேயெதி ரண்ணியேவரங் கண்ணியருளு மைக்கண்ணியே. ச

தேக்கியேவினை நூக்கியேபவ மாக்கியேயெனை வீக்குமால்
போக்கியேகரந் தூக்கியேயருள் வாக்கியேயிருள் நீக்கியே. ரு



## ஞானக் கொம்மி.

கொம்மியடிப்பெண்கள் கொம்மியடி - யிரு
கொந்தளவோலை குலுங்கிடவே
நம்மையாளுங் கச்சூர்த்தியாகனை நாடிக்கொம்மியடிபுங்கடி-புகழ்
பாடிககொம்மி யடியுங்கடி.

ஆரங்குலுங்கவே கொம்மியடி யமுதத்தியாகனென்றே கொம்மியடி, நீரஞ்சனாட்சிக்குக் கொம்மியடி திருக் கச்சூர் சிறக்கவே கொம்மியடி, வார்சடைமீதினிலேநீரான்துதி வானவர்சேர்திருக் கச்சூரான், பார்புகழ்சீலன் றிருக்கைபதித்திடுஞ் சூலன் பவனிக் குப்பண்படுங்குணாளன், அமுதத்தியாகனே, நாடித்தினங்கூடிப் புகழ்பாடிச்சொலியேமிகவும், பரிந்துகொம்மியடியுங்கடி மையல் புரிந்துகொம்மியடியுங்கடி. (கொம்மி)

வேதம்பரவுங் கச்சூர்வாசன் மால் விரும்பு மமுதத்தியாகேசன், மாதிடமுற்றோன் குகனை மகனெனப்பெற்றோன் பத்தர் மீதில்மா கிருபையுற்றோன், கண்ணுக்கு, மருந்திட்டுப் பரிந்திட்டு விருந்திட்டதையேசொல்லி, மையலாய்கொம்மியடியுங்கடி, மெத்த ஒயிலாய்கொம்மி யடியுங்கடி. (கொம்மி)

வேணும்பணியாயணிபாகன் வெண்டையரங்கன்பர வமுதத் தியாகன், பூணியல்மாரன் நாவலர்க்குப் போதமருள்தீரன், ஆரூரன் புகழ்ந்திடுதீரன் அஞ்சனாட்சிக்குப், பொங்கத்துட னங்கத் தினிற், பங்கிட்டருளெங்கத்தனைப், புகழ்ந்து கொம்மியடியுங்கடி, யுளமகிழ்ந்துகொம்மியடியுங்கடி. (கொம்மி)

தருமஞ்சனாட்சிமகிழ்பாகா பதுமத் தாண்டவம்புரி யமுதத் தியாகா, சுருதிப்பொருளேகா மெய்ஞ்ஞான சோதியாம் வாகா, அன்பருக்கு சொர்னத்தியாகா, மின்னும்வைபோகா, சுத்தர்கள் முத்திக்கொருகர்த்தப்பரதத்துவத்தனைத், துதித்துக்கொம்மியடியுங்கடி, சம்மதித்துக்கொம்மி யடியுங்கடி. (கொம்மி)

வையகம்புகழுங்கச்சூர்வாசன் திவ்வியமையார்கண்ணிமகிழ் நேசன், துய்யவுலாசன் வெண்டரங்கன் தொழுங்கச்சபேசன், மெய்ஞ்ஞானத்துல்லியமயேசன், வல்லசர்வேசன், சொக்கத்தமிழ் மிக்கக்கிருபை வைக்கப்புகழ் மெய்க்ககனநீ, துலங்கக்கொம்மி யடியுங்கடி, கொங்கை குலுங்கக்கொம்மி யடியுங்கடி. (கொம்)



## ஆனந்தக்களிப்பு

இராகம்-நாதநாமக்கிரியை, தாளம்-ஆதி.

அற்புதமற்புதமானே—கச்சூ
ரமுதத்தியாகேசர் பவனியைக்காண அற்

க. கருக்கடிப்பிள்ளையைப்போற்றி—முருகக்
கடவுளிருசரணங் கைதொழுதேத்தி
திருக்கச்சூரமுதத்தியாகேசர்—பாகந்
திருபுரமாதாஞ்ச ளுட்சிநின்றதுவும். அற்

உ. சடையிற்றரித்தகங்கைப்பிறையும்—நெற்றி
தனிலும்விபூதி தவளத்திளிறையும்
தொடைமலரணிகின்றமுறையும்—வானோர்
சுகம்பெறவருந்திய விடங்கண்டகறையும். அற்

ங. வச்சிரகுண்டலங்காதில்திடமும்—முத்து
மாலையுடனுத்தி ராட்சத்தாழ்வடமும்
நச்சரவணிநாகப்படமும்—மூன்று
நயனஞ்செங்கனிவாய்பல வதனத்தினிடமும். அற்

ச. ஆனைத்தோலுமேனக்கோடும்—புலி
யதளுமுந்நூலுடன் கூர்மத்திேடும்
வானத்தோர் விளையாடுஞ்—சிர
மாலையுடனேபாதக் கிண்கிணிசோடும். அற்

ரு. கரத்தினிற் கங்கணமிலங்க—ஒரு
கரத்கினிற்சூல கபாலந்துலங்க
அரக்கரும்விபுதருக்குலுங்க—சம்பு
அமுதத்தியாகேசர் பவனிகாண்டுங்க. அற்

சு. மதுக்கஞ்சந் தளிர்வெண்மைக்கொடையான்—கையில்
மறியுந்தமருகமும் வுள்ர்மழுப்படையான்
துதிக்கின்றநரைவெள்ளை விடையான்—அன்னந்
துலங்குஞ்செங்கமலஞ்சூழ் திருக்கச்சூருடையான் அற்

எ. திருவுருவாகிநின்றாரா—மந்த
திருவுருவாஞ்செயல் செலுத்தவல்லாராந்
திருவுள்ளந்தானளிப்பாரா—மலர்த்
திருவருள்விளக்கத்தைத் தேறவைப்பாராம். அற்

அ. அண்டரண்டங்களுமானார்—அந்த
அண்டரண்டங்களுக் கப்பாலுமானார்
மண்டலமூன்றுந்தானானார்—அதை
வைக்குமழிக்கும் வகைப்பொருளானார். அற்

கூ. ஒருவடிவந்தனைச்சூட்டி—அந்த
வொருவடிவுக்குள்ளேவ் வுயிரையுங்காட்டி

ஒருவனென்றுலகம்பாராட்டி—மெய்
யொருவனுக்குபதேச முரைப்பவர்மூட்டி. அற்

௧௦. இருவரென்றுருவுவைப்பாராம்—அந்த
விருவுருவதிலிரு வினையைவைப்பாராம்
இருவகைச்செயலினிப்பாராம்—கலை
இருவரினாலொளி யிசைக்கவல்லாராம். அற்

௧௧. மூன்றுகுணம்படைப்பாராம்—அந்த
மூன்றுகுணத்தில் முளைத்தெழுந்தாராம்
மூன்றுபொருள்படைத்தாராம்—பின்னும்
மூன்றுந்தானாகி முளைக்கவல்லாராம். அற்

௧௨. மூவருங்காணவொண்ணாராம்—அந்த
மூவருருவுந்தானாகி வந்தாராம்
மூவுருபேதமானாராம்—துதி
மூவகையாஞ்சுட ராகநின்றாராம். அற்

௧௩. நாலுவிதக்கருவானார்—பின்னும்
நாலிடத்தேயுநா னானென்பரானார்
நாலுவகைப்பொருளானார்—அந்த
நாலுவகைக்கொரு நாலிடமானார். அற்

௧௪. அஞ்சுதொழில் செய்வதானார்—நின்ற
ஐம்பூதமும்பொறி ஐம்புலனானார்
அஞ்சவத்தையஞ்சுமானார்—ஓதும்
ஆறிலுமைம்பத்தோ ரட்சரமானார். அற்

௧௫. ஆறாதாரங்களுமானார்—அந்த
ஆறிலுமைம்பத்தோ ரட்சரமானார்
ஆறாறுமாறைந்துமானார்—பேசும்
ஆறைந்துமாகிய வானந்தமானார். அற்

௧௬. திருமேனியுங்காவி பூண்டார்—தங்கத்
திருமணிமாத்திரைக் கோலுங்கையாண்டார்
இருவருங்காணாமனீண்டார்—பச்சை
இடுமென்றுசுந்தரர்க் கிரந்திட்டவாண்டார். அற்

௧௭. கோலப்பீலி மயிற்கோடும்—பாதக்
குறடுந்திருப்பாதங்குலுங்க விப்போதும்
சாலவண்வீதியமுதத்—தியாக
ராடுகின்றநல்லுண்மையைப்பாரீர். அற்

௧௮. தருகன்னல்பாடலங்கோங்கு—சூதஞ்
சந்தனஞ்சண்பகஞ் சாலநெற்றெங்கு
வரிவளைவயலெரிப்பாங்கு—மணி
மதிற்கோபுரத்திருக்கச்சூரில்வாசர். அற்

கசு. அரியயன்றேடுமுல்லாசர்—தேவி
அஞ்சனாட்சியிட மானந்தநேசர்
திரிபுரதாசன்சொற்ப்ரகாசர்—ரங்கன்
தெரிசிக்கவருள்முத்தி யமுதத்தியாகேசா. அர்

## சுவாமிகட்டியம்.

அன்றுநால்வர்க்கு மறைபுகலுந்திரு வாயா
ஆரூரனுக்கிரந்திடவந்த நேயா
துன்றுமுப்புரநீறுசெய்திடு முபாயா
தூயகடனஞ்சுண் டளித்திடு சகாயா
என்றுமடியாரிடமமர்ந்தருளுந் தூயா
எழிலஞ்சனாட்சி யிடமாகிய மாகாயா
மன்றல்கமழ்கச்சூரில் வாழ்ந்திடுவி தேயா
வண்மையமுதத் தியாகராய மகராயா
பராக்கு சுவாமி பராக்கு.

## தேவிகட்டியம்.

மாவுலகைந லிமகிட சம்மார சூரி
வானவர்களெப்பொழுதுமேதுதி கௌமாரி
பாவலர்கள்புகழிமய மலையருள் குமாரி
பண்புறுமெண்ணான்கறம் வளர்க்கு மௌதாரி
தேவர்புகழ்கச்சூரி னிற்கருணை வாரி
திகழமுதத் தியாகராஜரிட பாரி
கோவிந்தசோதரி மகாமாயி தீரி
கோதையர்கள்துதியஞ்ச னாட்சியெனும் நாரி
பராக்கு தேவி பராக்கு,

## தோடையம்.

ஜெய ஜெய ஜெய அகிலவை போகா
ஜெய ஒப்பிலாவை போகா
ஜெய அஞ்சனாட்சி பாகா
ஜெய அமுதத்தியாகர்—ஜெய ஜெய.

ஜெய நால்வர் பணிபாதா
ஜெய நால்வர் மகிழ்போதா
ஜெய காளியுடன் வாதா
ஜெய சொர்ன தாதா—ஜெய ஜெய.

ஜெய அன்ன விருந்திட்டாய்
ஜெய கச்சூ ருறைந்திட்டாய்
ஜெய வுலக மறைந்திட்டாய்
ஜெய மறைக ளறைந்திட்டாய்—ஜெய ஜெய.

ஜெய மாலும் அடிநாட
ஜெய அயனும் முடிதேட
ஜெய தேவர் புகழ்பாட
ஜெய பவனி புகழ்ந்தாட—ஜெய ஜெய.

## நொண்டி நாடகம்.

### காப்பு - விருத்தம்

தருக்கள்வானளவியே தழைக்குஞ்சோலைசூழ்
திருகச்சூரமுதத் தியாகேசர்மீதிலே
மருக்கமழ்நொண்டி நாடகம்வழுத்தவே
கருக்கமுடிமும்மதக் களிற்றைப்போற்றுவாம்.

### வெண்பா.

தேன்குதிக்குங்கச்சூர்ச் ஜெயவமுதத்தியாகருக்கு
நான்குதிக்குமெச்சுநொண்டி நாடகத்தை யான்கூற
வெண்டாமரைமேல் விளங்குங்கலைவாணி
தண்டாமரைத்தாள் சரண்.

### கலித்துறை.

புத்தி தருஞ்செல்வ முந்தரு மேயெப் பொருளுந்தரும்
பத்தி தரும்புவி யாண்டிடு வாழ்வும் பரிந்துதருஞ்
சித்தி தருந்திருக் கச்சூ ரமுதத் தியாகருண்
முத்தி விநாயகர் பாதார விந்த முகந்திடிலே.

### அவையடக்கம்.

### விருத்தம்.

இந்தநன் னடகத்தை யெழிற்கச்சூர்த்தியாகர்நாட்டிற்
செந்தமிழோர்கண்முன்னே செப்பநானுகந்தவாறு
சுந்தரப்பூமிதன்னைச் சூழ்கடன்மீதுநாவாய்
விந்தையாய்மிதக்கத்தோணிமிகுந்திடுந்தன்மைதானே.

### திபதை - இராகம் - நாதநாமக்கிரியை.

அமுதத்தியாகருக்குத்தொண்டன்-அவரைஅகத்தினிற்றுதியாத-அசடர்க்குச்சண்டன்-சமயத்துக் கேற்றவிடமிண்டன்-நொண்டி-சபைதனிலாடிக்கொள்ளத்-தட்டி கட்டினேனே-சுத்தவீரர் கையிற்கட்டாரி-மெத்த-துஷ்டர்க ளெனும் பாம்பை-ஆட்டும் பிடாரி-சத்துருவைவெட்டுங்குடாரி-நொண்டிசபைதனிலாடிக்கொ

ள்ளத்தட்டிகட்டினேனே-சொற்புலவர்க்கருள் தங்கக்கட்டி-சண்டை-தொடுத்து வீண்வழக்கிட்டிழுப்பதற்குக் கெட்டி-சர்ப்பனைக்கெல்லாமொருபெட்டி-நொண்டிசபைதனிலாடி கொள்ளத்தட்டிகட்டினேனே திருடர்க்கெல்லாங் குருபீடம்சோரத்-திரைகடல்நீந்தி யேகரைகண்ட ஓடங்-தருவெடுக்கவேமு தபாடம்-நொண்டி-சபைதனிலாடிக்கொள்ளத்தட்டிகட்டினேனே.

## தோத்திரம்.

திபதை - இராகம் - சங்கராபரணம்.

சீர்வளரிளம்பிறையுங்-கங்கையுந்-திகழ்சடையாரே-பெரும்-புகழுடையாரே-பேர்வளர்கணபதியைக்-குமரனைப்-பெற்றவையரே-தயவுற்றவையரே-புலவரெவருந்துதிக்க-வெழுதிரி-புரமெரித்தோரே - மதகரியுரித் தோரே-வலபூடணமாக-விடவர-வந்தரித்தோரே-கொன்றை-யுந்தரித்தோரே - சுந்திரமிலகியமாவரிப்புலித்தோலுடையாரே-திவ்விய-மால்விடையாரே-விந்தையத்தாகப் பிள்ளைக்-கறிதனை-மெச்சியுண்டோரே-வேடன்-எச்சி லுண்டோரே புரந்தரன்முனிவர்தொழும்-மான்மழுப் பொற்கரத்தாரே-திவ்வியவிற்கரத்தாரே - நிரந்தரம் பசுபதியாய்-களந்தனில் - நீலங்கண்டோரே-கையிற்கபாலங்கொண்டோரே-சோதியாயெங்குநிறைந்தே-ஆட்டிவைக்குஞ்-சூத்திரத்தரே-திரி நேத்திரத்தரே - கோதிலாமெஞ்ஞானப்-பொருளெனுங்கோலங் கொண்டோரே-திரி-சூலங்கொண்டோரே, புண்டரீகனுமாலுந்-தேடரும்-பொற் பதத்தரே-நல்ல-அற்புதத்தரேமண்டலந்தன்னிற்சுந்தரர்- கண்ணுக்கு-மருந்தையிட்டோரே-அரு-விருந்தை யிட்டோரே-மார்க்கண்டேயருக்காக-உகந்து-எமனை யுதைத்தோரே-காமனை வதைத்தோரே-காக்கும்பொருட்டாகப்-பத்தனெறி-கல்லடியுண்டோரே - விஜயன்-வில்லடியுண்டோரே-மந்திரப் பொருளேயன்று-பிட்டுக்கு - மண்சுமந்தோரே-சிரசிற்-பெண்சுமந்தோரே-நந்தி நண்ப வடியார்க்கு-அருள்செய்ய-நாடிநின்றோரே-பேயோ-டாடி நின்றோரே-புவனமெங்கெங்குமுய்யக்-கண்ணருள்-புரிந்து நிற்போரே-அரு-மருந்துவெற்போரே-பவசாகரந்தொலைகும்-நற்கிருபாநிதியாரேகம்பானதியாரேஒருபோதும்மறவா-அன்பர்களுளநாட்டாரே-தொண்டைவளநாட்டாரே-விரும்பியஞ்சனுட்சி-மகிழ்ந்துள-மெச்சூரரே-திருக்கச்சூரரே-தொண்டர்கட்கிடையூறு-செய்வோர் சொல்லும்பரியாரேவெல்லும்பரியாரே-புண்டரீகன் சேடன்-சுரர் செப்

புதற்கரியாரே மும்மதக்கரியாரே, பலகாலும் படைத்த வெள்ளிடபக் கொடியாரே அடியாருக்கடியாரே, நலமிலகியதும்பை வெள்ளெருக்கின் - நற்றொடையாரே செம்பொற் றொடையாரே, நாராயணன் மனதில் - உறையும் நற்பொருளாரே அருமறைப் பொருளாரே, தீராவினை தீர - அருள் வயித்திலிங்கரே - நல்ல - செயதுங்கரே, அடியேன்றன் றுயர்தீர்த்தருள் - அமுதத்தியாக ரேவர வமுதத்தியாகரே, படியதனிற்பெண்கள் மீதினிற் பாசங் கொண்டேனே வெகு மோசங்கொண்டேனே, கன்னியர் தெய்வமென்றே கொடுத்திடக் கன்னமிட்டேனே வெகு சொன்னமிட்டேனே, குன்னமாயெண்ணமற் கூத்திக்கிட்டுக் குரங்கானேனே எங்குஞ் சிரங்கானேனே, கண்டவர் நகைத்திடவே களவினிற் காலையிட்டேனே மனதில் மாலையிட்டேனே, அண்டிக் குதிரைதிருடப் போய்நான் அகப்பட்டேனே ஐயோ வகப்பட்டேனே, அசரதுரபாபுசாஹேப் பண்டையில்விட்டாரே யென்னை ஜெயிலிலிட்டாரே, வசப்பட்டகள்ளனென்று என்சொல் மறுத்துவிட்டாரே காலைத் தறித்துவிட்டாரே, பாரமோ வென்னைக்காக்கக் கடைக்கண் பார்த்தருள்வீரே துயரந் தீர்த்தருள் வீரே, சாரங்கதரனுக்கன்று தணிந்தகால் தந்தீரே என்னைக்காக்கவந்தீரே, பத்தரிற்பேதமுண்டோ நானும்மைப் பணிந்துகொண்டேன் துயரந் தணிந்துகொண்டேன், சத்தியமா வுமைநம்பினேன் கைகால் தந்திடுவீரே என்முன் வந்திடுவீரே.. (உ)

வசனம்.

அகோ வாரும்பிள்ளாய் நொண்டி! அகிலாண்டகோடி பிர்மாண்ட நாயகராகிய திருக்கச்சூர் அமுதத்தியாகராயரை வேண்டிக்கொள்ளுகிறாயே உன்னூரென்ன? உன் பெயரென்ன? நீ எங்கேயிருந்துவந்தாய்? உன் கை கால் அறுப்பட்ட விபரமென்னவென்று சபையோர் கேட்க, நொண்டி சொல்லுகிறவிதமெப்படியென்றால்,

விருத்தம்.

இரங்கனனுதினம்பரவு மமுதத்தியாகேசர்வரை யினிலேயுள்ள திரங்கனஞ்சேர் சபையாரே யென்பேரும் வரலாறுஞ் செப்பச்சொன்னீர், தரங்களறிந் தங்கங்கேதிருடினதும் பேருருஞ்சனியா லென்கரல், கரங்களறுப் புண்டதுவும் விபரமா வுங் கண்முன்னே கழறுவேனே.

## திபதை - இராகம் - வராளி.

இரும்பாநாட்டுக்குள் கெடிவீர சிங்கக்கள்ளன் எழுபத்தாறுவருடஞ் சேயில்லாமற் பெரும்புகழ்நிதம்பெற்ற கள்ளழகற்கேதேதோ பிரார்த்தனை பண்ணிக்கொண்டான் மெத்தவும் சாதனைக்கள்ளரிற்றெட்டித்துணிந்தகள்ளச்சாதியில் வந்தவனல்லவென்றந்தை பூதலத்திலதிகமா மறவர்குடியிற் புகழ்பெறும் விஜயக்கள்ள கோத்திரத்தான் கெடிவீரசிங்கமா மறவன்செய்யுந்தவத்தால் கீர்த்தியாக விரண்டுபேர்பிறந்தோம், படியினி - லென்ரூயார் சோரச்செவ்வெண்ணெயிற் பகட்டும் வஞ்சமுங்கலந்தே புகட்டினள் மாநிலத்தி லெவருமயங்கவே மையிடென்று மகிழ்வாயென் விழியினிலே மையையிட்டாள் மேனி தெரியாமலே காவுபொட்டிடுவையென்று விளங்கிளம் பிறைநுதலிற் பொட்டுமிட்டாள், மகுடமன்னவர்வீட்டி திருடவே காப்புக்கட்டமலர்க்கைக்குள் காப்புமிட்டாள் மெத்தவும் அகமகிழ்ந்திருவரும் வளர்ந்தோம் வித்தைகள் அஞ்சு பிராயத்திலே இராம லட்சுமணரைப்போல் அம்புவித்தைகள் கற்றோம் பின்னையும் மீறுமேழெட்டுவயதிற் பில்லி சூனியங் களவு வித்தைகளெல்லா மறிந்தோம் ஒன்பது பத்து வயதுக்குள்ளே சொக்குப்பொடி கன்னக்கோல் பாதாளவஞ்சனமுதல் அம்புகுண்டு முற்றும் விலங்குபூட்டுத் தறிக்கூப்பச்சிலையெதிரி மோடன மந்திரமும் மோகனமுச்சாடனமாகரிஷ்ணம் வழுக்கெண்ணெய் உச்சிதமான மணற்குழையம்பின்னும் வெகு உச்சாகமாகக்கற்ற வித்தை யிவ்வளவென்று உரைக்கப்போகுமோ வென்னல் அருகான தன்னரசுநாட்டில் இரண்டுபேருங்கூடிச் சமர்த்தக்கள விடவேகினோம் அந்நகர்தன்னிற் செயராமநாதக்கள்ளன் அகந்தன்னிற் கன்னமிட்டுச் சோதனை தன்னை அறிந்துகொண்டோம் என்றன் சமர்த்தறிந்து தன்பெண்ணையே கொடுத்தான் மணஞ்செய்து பின்னுமென்றம் பிக்கம்மான்வீர கேசரிக்கள்ளன் பெண்ணை விவாகஞ்செய்தேன் இரண்டுபேரும் வீட்டில்வந்து தந்தையைப் பணிந்தோ மெனக்கு மெச்சி வீரசோரப் புலியென்றே பேருமிட்டான், மேட்டியாமென்றம்பிக்குக் கள்ளக்கிரீட்டியென்று தருதாகப் பேருமிட்டாலோசித்துவித்தை யித்தனைகற்றோம், வடதேசம் போய்த்திருடிவிருது பெற்றிடுவோமென்றேன் அதுமெத்த உத்தமமென் றென்றம்பி - யவரங்கபாச்சாவின் னூரிற்றிருடப்போனேன் நானன்று

மற்றுநாள் விஜயரகு நாதாராயத்தொண்டை மாலூர்தனிற்சென்றேன் அங்கேயொரு உத்தமிநின்றுளெங்கள் அத்தைநீயென்று சொல்லியொப்பாரி பிடித்துக்கொண்டேன் அந்தமகாபத்தினி தன் வளவிற்கூட்டிப் போய்வைத்து அன்பாய்ப் பத்தியுடனே விருந்து செய்தனள் பத்துநாளங்கிருந்து நானொருநாட் சந்தைப் பார்க்க வேணுமென்றழைத்தேன் நல்லதென் றென்பிறகே வந்தாள், பவளக்கோவை யெல்லாம் எடுத்து நாணயம்பார்த்தேன் போட்டுவிட்டேன், அன்புடனே முத்துச்சரங்களைஞ்சுங்கொண் டழகாய்ச் கையிலெடுத்தேன் விலையென்ன சத்தியமாகவுரை யென்று கேட்டேன், அவன் சரமொன்றுக் கைந்துபொன்னென் றான், காட்டிவாரேன் அத்தை நீங்களிங்கே யிருங்களென்றுமொழி ஆசாரமாக வுரைத்தேன்,அத்தயை வைத்துப்போட்டுக்கிரியா அக்கணத்திலந்த மதுராபுரியில்வந்தேன், சொக்கரை மெத்தக் களவு பலித்திடவேண்டுமென் றந்த மீனாட்சியைத் தொழுதேன்.

## கலித்துறை.

அணிந்தேன் விபூதியைச் செக்கனைய்யங் கயற்கண் ணியையானன்
பணிந்தே னொருதினம் போச னஞ்செய்து பசியதனைத்
தணிந்தே னவிடம்விட்டே வடதேசத்தின் றன்திருடத்
துணிந்தேன் பயணங்கொண்டேன்சென்றவா றினிசொல்லுவனே.

## திபதை-இராகம்-புன்னாகவராளி.

மதுராபுரியைவிட்டு-மிக-மங்களஞ்சேர்சிவகங்கையில்வந்-திகாரஞ் செய்பவர்போல்-நல்ல-ஆளழகாநாலு-நாளிருந்தேன்-மறுநாட்பயணமதாய்- முன்பின்- வாடிக்கைபோல் வெகு-வேடிக்கையாய்- அறுநாளிற்றஞ்சைநகர்- வந்து- அத்திக்கொண்டேன்-தெரு-சுத்திக் கொண்டேன்-இருந்தேனொருமாதம் - அங்கே-ஈஸ்வரையன்வீட்டில்- நேசமதாய்- விருந்தாயெனக்குவிதஞ்- செப்புமேரைமரியாதை-நீருடனே-முத்துப்போலன்னங்களோ-ரச-முப்பழமோஎங்கும்ஒப்பரிய-புத்துருக்கு-நல்லநெய்யோ-மணப்பொக்கசமோ-வெள்ளைச்சக்கரையோ-பத்துவிதம்பொரியல்- ஒருபத்தெட்டுபச்சடி-வைத்திட்டதோ-மற்றுக்கனி விதங்கள்-இந்த-மண்டலமெங்கணுங்கண்டதில்லைசுகந்த அதிசயமோ-வடை-தோசை

களோ - என்மே லாசைகளோ - அகந்தனிலே மிகுந்த-உற்ற-
ஆயாசந்தீர்ந்திடும் - பாயாசமோ-தலைவாழை யிலையிற் போடுஞ்-
சன்னங்களோ-அதிற் றென்னைகளோ உலகேழுமே மணக்குங்-
கையில்-ஒட்டிக் கொள்ளுந்தயிர்க்-கட்டிகளோ-கண்டேனு பசா
ரம்-மெச்சிக்-கைக்கடயந் தந்தேன்- அக்கரையாய்- மண்டலாதி
பன்றனைபோல்-அங்கே-வாய்ந்திருந்தேன் வீட்டில்-வீற்றிருந்தே
ன்-இரவும்பகலு மங்கே-வெகு-இங்கிதமாய்ச் செய்தார்-பொங்க
மதாய்-ஒருநாளையர் வீட்டில்-நல்ல உச்சிதமாங்குச்சி-லிச்சிநின்று
ள்-இவளாரெனக் கேட்டேன்-இவள்-இந்தப்புரமல்ல-சொந்தப்பு
ரம்-யவனுமதி லிருந்து-வந்தேழெட்டுத் திங்களாய்-வாழ்வுற்றனள்
மானேஜியப்பன் மகள்-இவளை-வைத்துக்கொண்டேன்-நிதங்-குத்
தகையாய்-ஆனாலுமிந்த மின்போல்-சொக்கி- யாரினிகாணிந்தப்
பாரினிலே-முகமாயந்தன் ளிற்சிக்கி-செம்பொன்-முப்பத்தையா
யிர மொப்பித்தனன்-ஜெகமெங்குமேமதிக்கும்-ரத்னச்-சித்திரப்ப
ணிகளும்-முத்துகளும்-மோகனமாலைகளும் விலை-மூந்நூறுபத்து
ப்பொன்-கிண்ணயமாய்-மோகமதாயளித்தேன்இவள்-முற்றிலுஞ்
சித்தினி எத்துமின்னாள்-ஆடவரை மயக்கி-யவன் அறியாமற்றே
டுஞ்-திரவியங்கள்-கோடானு கோடியுண்டே - அந்தக்-கோதை
யைநம்ப-வொண்ணுதேயவள்- தன்றனத்திற்கையை வைத்தால்-
அவ-ளுன்றனத்திற்கையை-முந்திவைப்பாள்-தந்தனக்காரி யென்
றுள் தெய்வந் தான்கூட்டிவைத்தது நான்களிக்க, வென்றந்தவே
ளையினில் என்றன் இஷ்டதெய்வீத்தைக் கும்பிட்டுக்கொண்டேன்.
நன்றிந்தவேளை யென்று நடுராத்திரியிற்குறி பார்த்துக்கொண்
டேன், எடுத்தேன் கையிற்கன்னக்கோல் வட்டமிட்டுச் சுவர்த
னைச் சொட்டை செய்தேன், படுத்தே னுழன்றசுத்தி எங்கும் பா
ர்த்துவிட்டேன் பொடி தூற்றிவிட்டேன், மானேஜியப்பன்மகன்
சப்பிர மஞ்சத்தினிலந்த வஞ்சியுடன், தானேபடுத்திருப்பான்
என்றுதள்ளிவிட்டேயென்றன் உள்ளமிக்க, மகிழ்வா யவள்தனை
யும் மெள்ள மாட்டிக்கொண்டேன் கேளி கூட்டிக் கொண்டேன்,
சுகமேயனுபவித்தேன் நன்றாய்த் தூங்கவைத்தேன்முழுதும் பணி
களுடன், ரொக்கமும் பெட்டியுமென்றன் துப்பட்டிக்குள் நழு
வாமலேகட்டினேன், மனநாட்டமதாயொரு பாட்டையைக்கொ
ண் டாரூரில் வந்துநின்றேன், இளைப்பாற்றிக்கொண்டேன் மனந்
தேற்றிக்கொண்டேன், பூராயமாய்ப் புதைத்தேன் முன்-பெட்டி

யையும் பணிகட்டினதும், ஒருநாளங்கேயிருந்து, ரொக்கமுள்
ளதெல்லாமெடுத்துள்ளமகிழ்ந்,திருநபைபிலேயடைத்தேன்தோள்
இரண்டுக்கும்பூட்டிக்கொண்டண்டையிலே,வருவோரறியாமல்ம
லர்மட்டவிழுநாகப்பட்டணத்துத் தெருவீதிதன்னிற்சென்றேன்
அங்கே தேரடியில் நின்றேனேரத்திலே அருகான வீட்டிலுள்ள,
சாமிஐயர்க்கிரண்டு பொன்,கையிற்றந்தேன்மருவானபோசனந்
தான், செய்துவைத்திருமென்றே யுரைத்தெழுந்து சவுந்தரராஜ
முகில் திவ்விய சன்னதியிற் சென்றேன், உன்னதமாய்த்தவஞ்
சேர் சிதம்பரமாமுனி தன்னைக்கண்டேன் சுவாமி தன்னைக்கண்
டேன், சேவை செய்தேன்களவு மெத்த சித்திக்கவேண்டுமென்,
றெத்துடன்முன் சேர்வைக்காரன் வீட்டினில் உள்ளசெம்பொன்
மணிதுணிசொம்புமுதல், பார்த்திருந்த சூட்டனைப் போல் ஒன்
றும் பாக்கியில்லாமலே தூக்கிக் கொண்டேன், தூர்த்தன் பட்
டாபிராமநாய்க்கன் சுந்தரன்வீட்டிலுந் தந்திரமாய் நுழைந்தே.
சாவுபொட்டிட்டேன் என்றன் ரூபந்தெரியாமல் ஞாபகமாய் வி
ழித்துக்கொண்டேயிருக்க, யாரு மெச்சிடவேமுன்பின்வைச்சது
போல் பொட்டனவே யெடுத்தேன், காதிற்பூட்டிக் கொண்டே
னன்று யாட்டிக்கொள்ளுங் கடுக்கன்கழற்றிக் கொண்டேன், பச்
சைக்கல்முருகும் வச்சிரக்கல்மோதிரம்காப்புங் கழற்றிக்கொண்
டேன்இனிக்காரியமென்னென்றுவீரியமாய்பார்ப்பாரசாமி வீட்
டில்,அன்னம்பட்சமுடன்கொண்டேன் அட்சணமே,திருவேள்மக
ராஜன் என்னுஞ் சாமியாப்பிள்ளை மாமியார், தெருவீதி தான்
கடந்தேன், வெள்ளான், செட்டித் திருமேனி மட்டி வீட்டிற்புகு
ந்தேன், அதட்டிவந்தார்பொடிபோட்டேன், கன்னத்திற்போட்
டேனே அகந்தனிலுள்ளபொன்னை, மூட்டை ஆக்கிக்கொண்டே
ன், கையிற் றாக்கிக்கொண்டேன், சமர்த்தாயுடும்பெறிந்தே,அல
ங்கந் தாண்டிக்கொண்டேன் மாலைவேண்டிக்கொண்டேன், தடி
கொண்டதிசுருக்காய் எட்டித்தாலைவைத்தேன் வெளிப்பாளயத்
தே, களிப்பாகநாகூரில் தங்கக் கச்சி திருவாசல் உச்சிதமென்
றிளைப்பாறும் வேளையிலே அங்கே, இன்பமீராசாயப்பு பொன்
கோரியைக் கண்டேன், சலாமுஞ்செய்தேன் கெட்டிக்காரன்
செய்வாயென்று கோரிக்கொண்டேன், நடந்தேன் அவிடம்
விட்டுமனம் நாடிக்கொண்டேன் தரங்கம்பாடிதனில், விடிந்திடும்
வேளையிலே மிகு வெற்றியுடனங்கே உற்றனனே.

### விருத்தம்

அஞ்சுதினந்தரங்கம்பா டியிலிருந்து கோமுட்டி வியாபார ஞ்செய், பஞ்சமா பாதகன்சே ஷாசலசெட்டி பாக்கியமெல்லாம் பறித்துக் கொண்டு, பஞ்சை ப்போ லிரந்துண்ணக் கப்பறை யைக் கையிலளித் தப்பதியை விட்டு, ரஞ்சிதஞ்சீர் காழிசிதம் பரங்கடந்து புதுவைநகர் நான்வந் தேனே.

### வேறு-திபதை-இ-ம்-புன்னாகவராளி.

புதுவைநகரில்வந்தேன் மந்தரப் புயமகராசபாபைய துரை வேள், சதுரன்வீட்டுக்கடுத்த வளவினில், தங்கியிருந்தேன் மனம் பொங்கியிருந்தேன், அதிபன்வசந்தராய-விசய-ஆனந்தரங்கதுரை தானதர்மந், துதித்தே எவராலும் அளவிட்டுச்சொல்லப்போமோ சொல்லிவெல்லப்போமோ, மதியாலிவன்வீட்டிற். கன்னமிடல் ம ரியாதை யல்லவென்று தெரிந்துகொண்டேன், பதருமலே யிருந் தேன், மனுஷப்பதராங்கந்தப்ப முதலியவன், ஒருவர்க்கு மொரு காசுநல்கா, னந்த உலுத்தளிடத்திற்பத்துச்செலுத்துவதே, பெரி தென்றுமனதிலெண்ணி, ராத்திரியிற்செட்டிமகன்வீட்டினிற்பின் குட்டிச்சுவரைத், தாண்டிலகுவாய்க்குதித்தேன் பின்கட்டுத்தலைக் கடையினின்றுகலக்கமுற்றேன், வேண்டிக்கொண்டேன் கள்ளழ கரைத் துணைவர வேளையிந்தத் திருட்டென்ன நாளைவருமோ, என்று படுக்கைவீட்டுக் கதவினில் இட்டுபூட்டுவிடவிரலிட்டுத் தெறித்தே, இன்றைக்குலபித்ததென்றேன், மனதுக்கிச்சையுள்ள மட்டுசுமை வைத்துக்கொண்டேன், முன் மூட்டையுங் கட்டினே ன் தோளில்வைத்து முன்கட்டு வழிநடந்தேன்-என் கெட்டித் தனம், நன்னயத்துடனோர் நாள்தனிற் - சதுரங்கபட்டணத்தில் வந்தேன், பொங்கமுடனே - மற்றைநாள் தம்புவீட்டிற்-கன்ன மிட்டு வாய்த்ததெல்லாஞ்-சுற்றிக்கொண்டு - ராத்திரிதானே, வெ ற்றிக்கழுக்குன்றத்தாண்டி-அதிக - வீரியமாகத் திருப்போரூரில் வந்தேன்.

### விருத்தம்.

சீர்வளருந் திருப்போரூர் தன்னில் வந்தேன்
திருக்குளத்துக் கீழ்த்தெருவிற் கருண வம்சப்
பேர்வளர்தாண் டவராயன் சத்தி ரத்திற்
பெருமையா யுண்டிருந்தே னப்போ தங்கே



பூர்வளமெல் லாமறிந்த ஆண்டிவந்தே
யுறவானுன் சாமிதெரி சனஞ்செய் வோமென்
றேரர்தினங்கோ யிற்சென்றேன் குகனை சேவித்
துயர்நடஞ் செய் பெண்களைக்கண் டுருகினேனே.



திபிதை-இராகம்-முகாரி.

காமவல்லி அம்பாயிரம்-எழிற்-கனகவல்லி கண்ணுயிரம்-அபி-ராமவல்லிகுணவதி மதராசவல்லிரூபாவதி, தனுக்-கோட்டி ராமி சவுந்தரிகன்னி, கோமளாங்கி துரந்தரி, புண்ணிய-கோட்டி சீதைகல்யாணி, மோகப்பூங்குழலி வாணிநாராயணி,செல்வநாச்சி யர்புச்சி-பச்சைப்பெண்-விசயலட்சுமிமுத்துலட்சுமி-கங்காயநீலா யதாட்சிசெங்கமலாட்சிவெங்கடலட்சுமி-நல்ல சொக்கநாயகிதங் குஞ்சுப்பிபொன்னி சுபத்திரை-சர-சக்கலாநிதி-பாப்பிசின்னியுஞ் சக்கரைப்பெண் - சமுத்திரம்-முத்து-மாரி-சற்குணபூஷணி-நாக-மாமணிமதுர பாஷணி அதில் - மாரிசக்காரி - யொருத்திவிந்தை யை - வழுத்தவுமென்னலாகுமோ - அந்த துத்தியூதிய நாதமும் அதிற்-சேர்ந்துபாடுஞ்-சங்கீதமும்-விந்தை மத்தளத்தின் - விநோ தமும்-நாட்டிய வரிசையிற் - பேதாபேதமும் - ஒத்துநட்டுவன்-உட்களிப்பதும்-அதில் நானுங்கூடக் களிப்பதும் ரத்நச்-சட்டமா மெய்-சொலிப்பதும்-பாத-சதங்கைநூபுர - மொலிப்பதும்-மெய் யின் நல்வடிவுஞ் சிங்காரமும் - அபிநயத்திலே - யொய்யாரமும்-அவள்-கல்வியின் விபகாரமுங்-கையைங் காட்டியாடுங்-கெம்பீர மும்-திவ்விய-விரவுசவ்வாது-பூசியே என்னை-வெருட்டி கண்வலை வீசியே-அவள்-பரதநாட்டியமாடினுள் - நான் பரதவித்துள்ளம்-வாடினேன்-அனவரதமுமெத்த-மயங்காதேயென்று மனதுக்கே திடஞ்சொல்லினேன்-அப்போ - சுரத கிரீட்டியை-மெச்சித் தந்த னன்-சுந்தரச் சந்திரஹாரமு-நல்கன்னிமாரெனுங் - தாரைக்குள்-ஒரு-களங்கில்லாச் சந்திரன்போலவே-சோதி-மின்னல்போலவிள ங்கியே-சகி-மின்னார்கள்புடைசூழவே-ஒயில்அன்னம்போல நடந் தனள் நின்றுயானும் பின்னே தொடர்ந்தனன். அப்போதன்ன ந்தான்-அருந்திடச்சமயமென்-ருண்டிப்பையல் வாவாவென்றான், அப்போ-தன்னமும் மருந்தாய் நினைந்தென்றன் அடியெழாமலே யோசித்தேன்,அவளை என்னாலே பிரியக்கூடுமோமன-மின்னெரு மின்னைத்தேடுமேற, ஆனல், தன்னையுமறியாத சன்னதங்-தானுண்

டோவென-வெண்ணினேன் அவள் முன்சென்றாள்-மனம்-பின்செ
ன்றோடிற்று-முற்றிலும் பற்றித்துள்ளியே- ஆண்டி-பின்சென்றே
னிருபாதமும் பித்துப்பிடித்தாற்போல்-மெல்ல நடத்தவே-இந்த
வஞ்சிமாயத்திற் சிக்கினேன்-என்றன்மனதறிந்தனன்-ஆண்டியும்
மெத்த-வஞ்சமேசெய்யும் வேசிக்கூட்டங்கள்-வகையை நீரறியா
துண்டோ-மெத்தக்-கொஞ்சநானறிந்ததுங் கேட்டதுங்கூறுவே
னிதைக்கேளென்றான், முன்மாமணத்தையல்போலுடன்-கட்டை
மருவியேறுவனென்றுபின், அவன் கோமணத்தையும் வாங்கிக
கொண்டதி, கொடுமைசெய்தனள் ஒருமின்னாள், மையல்மதியுற்
றோர் மன்னன்றிருவொற்றியூரில் வந்துசேர்ந்துபொன்றந்தபின்,
நாட்டில்மதிகெட்டானென ஓடுமீந்தனள்வல்லியென்றுமுன்னொ
ருமின்னாள், ஒருபுலவன் கைப்பணம்வாங்கியே யவள் புகலவே
கிழவிசொற்படி-ஒருதலைவன் கூடும்போதினி-லறிந்திடச் சபைக்
கிழுத்தனள் ஒருமின்னாள், நிதம் படுக்கைக்காயிரம் பொன்னுந்
தந்து பூபாலன் கேட்டதனந்தந்து-சுரைக் குடுக்கை வாங்கிக்
கொண்-டொருவழிசெல்லக்-குடிலஞ்செய்தனள் ஒருமின்னாள்,
சாமிநீதந்த ஆசையென்னை மயக்குது நீயிட்டமருந்தேதடா மறு
மாதரைக்கூடேனென்று சத்தியம் வந்துகோயிலிற்சொல்லடா,
நல்லகாதல்கொண்டது மெய்யடா-இப்போது காய்ச்சுநீ நெய்ய
டா, பிசகாத யென்கையையிடுகிறே னென்றுகபடஞ்சொல்லி
அவன் கையிற் கணப்போதில் சத்தியஞ்செய்து கொள அப்போ
து காசினைப்பறிக்கவே நல்ல-சூதுசெய்தாளென் றறியாமற்-செய்
யுந்தொழிலைச் சொல்லவும் போகுமோவீட்டில் வந்தபோது நீ
எங்கிருந்துவந்தா-யிந்நேரமேன் சொல்லடா-அந்த விந்தைக்காரி
விடாளுன்னை-இனிமேலு நீ யங்கே செல்லடா-உன்றன்-சொந்தக்
காரிநானல்லடா-நீதொடாதே தூரப்போய்நில்லடா-என்று தங்
தனங்களும் பேசுவார், வீண்சண்டைகள் விளைத்தேசுவார், அனு
பந்தம்போற் கையை நொடிப் பாரடா-பாவியென்றெட்டி யிடிப்
பார்-மிகச்சந்ததமுனை நம்பினேன் உன்றன்-சதியைக்கண்டு நா
ன் வெம்பினேன் என்று சிந்தைநைந்துநைந் திருகுவார்-கிட்டிச்
சிணுங்கியே மெள்ளவருகுவார்-அதற்கெந்தனாசைக்கண்ணாட்டி
நான்பிரிந் திருப்பேனோ-ஆவிதரிப்பேனோ, என்று சுந்தரச்செம்
பொன் வாரிவாரிச் சொரிகுவார் மழைபோலவே, சாடை விந்
தை யாக்கைவரண்டது-கண்டால் வீட்டில்வந்தாலும் பேசிலார்,

பின்னும் இந்தவேளை கூடாதுபோ நீ எழுந்திரென்றுமொழிகு
வார் இன்னங்-குந்திக்கொண்டிரு இஞ்சித்தின்ற குரங்குபோலெ
ன்றும் வைகுவார்-மெத்த ஆசைகொண்டொருவன்வந்தே உன்
னடிமைநானென்றுசொல்லியே விசுவாசமாய் வெள்ளிலைச்சுருள்
தனை டிடித்தவள்கையிலீகுவன் - உல்லாசம் போலதை வாங்கிக்
கொண்டு நீர் நல்லதிங்கே யிருமென்று தன்னாசைநாயகன் படுக்
கைவீட்டுக்குள் அடுத்தவள் சுருள்கடித்தவள் அதிற்பாதியீகுவள்,
ஏலங்கிராம்புகள் பாக்குடன் போட்டுக்கொள்ளுவள்-அவன் வா
தித்தே பலவந்தமாய்க்கேளி மாட்டிக்[illegible] வலிதானயி[illegible]ன்
[illegible]ணியார் [illegible]த்துக்கொண் டதிசரசம் பேசியே வரு
ருவாளா-அதை இந்தத் தோஷியறிவானோ உன் னிதழ்ரசந்தாடிக்
கண்ணென்றால், உனக்கில்லையிப்போ இந்தவெல்லப்பாகென-எத்
துவாளதிலேங்கியே சலாஞ்சொல்லப் போகுமோ வென்றுகெஞ்
சினால் துவரையத்தனை யருளுவாள்-அந்தமெல்லியரைப் போலல்
லகாணிவள்-வெகு பூசைகொண்ட சாமியார்-அதைச் சொல்லவெ
ன்றால்முடியாது, எழுதத் துய்யவேட்டிலடங்காதே, அதில் ஆனா
லுங் கொஞ்சஞ்சொல்லுவேன் அதை அகமகிழ்ந்து கேளென்
றான், சாதி யீனனாகிலும் பொன்னைத்தந்தால் இணங்குவாள்மெய்
வணங்குவாள்-இவள் முற்றத்தில்வந்து அத்தத்தைத்தந்து முழு
மதிமோசம்போனேனே என்று சுற்றிச்சுற்றித் திரியுங் காமுகர்
சொல்லலாமொருநூறுபேர்- வீடுவிற்று நான் இந்தப் பொ.த்தலு
க்கு அளித்தனென்று புலம்புவாரிருநூறுபேர்-அவள் ஆசையால்
ரசவாதஞ்செய்து,பொன்னாகாமல் ரசப்புகையிலே மனங்கூசியே
விழிக்கெட்டுபோய்க் குருடானவர் நூறுபேர்-மெத்தக் காசா
சைக்காரியென்று கன்னங் களவுசெய்திடப்போனபேர்-இந்தக்
காசினிக்குள்ளே சிக்கிக்கொண்டு கைகால்கள்போனவர் நூறு
பேர் அரையாப்பு மேகங் கொறுக்குமாந்தை, அதிகமாகிய ரோ
கங் கொண்டிந்தத் தோப்பிலே, கையில் வேப்பிலை கொண்டு து
டிக்கின்றா ரொருநூறுபேர் கைகாப்பும் விற்றெறொட்டுக்- கடுக்க
னும்விற்றுக் கடனுமேலிட்டு கேலியாய்ப் பிண்டக் காப்புக்கும்
வழியில்லாமற் கையிற்கப்பறை கொண்டோர்நூறுபேர், இந்தச்
சூதுகள்ளிக்குப் பொன்னையீந்து தலோபியானபேர் நூறுபேர்,
இந்தத்தீ தெல்லாமற முக்கியமாகிய சேதுக்கேகினர் நூறுபேர்,
மெத்த நல்லிவர் தீராகையால் இதை நானுரைத்தன னுண்மையா

யென்று சொல்லவே, யாண்டிப்பையனுக்குநான் சொல்லினேன், மனதுறுதியைக்கெட்டியிரும்புத்தூளைச் செல்லரிக்குமோ, வீட்டெலியும் பூனையைக்கெலிக்குமோ, சுத்தநெருப்பிலே புழுப்பற்றுமோ, கடல்நீறும் வெய்யிலால் வற்றுமோ, பிள்ளைப்பூச்சிக்குச் சேருெட்டுமோ, பெரும்புலியைச் செம்மறி கிட்டுமோ, மஞ்சட்பூச்சுமவெய்கிலிற்சுட்டுமோ, என்னபுதுமைநான்மோசம்போவேனே, வென்று சித்திரங்களும்பேசினேன் மலர்ச்சித்தசன்விடும் வாளியால் என்றன் சித்தமெத்தமயங்கினேன் அவள், சித்தறியாமல் முயங்கினேன் இதைச், சிறிதெனச் சொல்லப்போகுமோ மையல், செயிக்கவுமென்னலாகுமோ அன்றை, மறுதினத்தில்நடந்திடும்வாறு நானினி யென்ன கூறுவேன்.

விருத்தம்.

பஞ்சபாணன் சரத்தால் மெலிந்துவாடிப்
 பரும்புலியோர் போனிலகப் பட்டாற்போலும்
பாவிமதராசவல்லி கையிற்சிக்கிப்
 பஞ்சபாதகிவீட்டிற் சென்றவாறும்
பசப்பித்தாய்கிழவிசெம்பொன் பறித்தவாறும்
 பஞ்சையைப்போல்வீடுவிட்டுத் துரத்தியென்னைப்
பாதகஞ்செய்திடுவாறும் பகருவனே.

திபதை-இ-ம்-நாதநாமக்கிரியை.

கண்டவர் மயங்கவே நூறுபொன் விலைபெற்ற கருப்பூரபாகை யொயிலாகக் கட்டிக் கொண்டேன், எண்டிசையினிலுள்ள ஏந்திழையார் மயங்கஇலகுந் திலகநுதலில் இட்டுக்கொண்டேன், இலந்தைக்காயத்தனைப்பருமன் கட்டாணிமுத் திசைந்ததாக்கடுக்கன் செவியிற் பூட்டிக்கொண்டேன், நலந்திகழ்நாற் பத்து நாலரை ரதிப்பச்சை நல்லமுருகுங்காதிற் பூட்டிக்கொண்டேன், உரத்தினிறைந்திருக்கும் முழுதும் வச்சிரப்பதக்கம் ஒளிபெறவே தரித்தேன், மெத்த விசித்திரத்துடனே சந்திரஹாரமும் பிடியுண்டுசெம்பொன் னூலுந்தரித்தேன், எந்தனிருசெங்கைக்குப் பத்துமாற்றுத் தங்கக் காப்புக்கொலுசுஞ் சிறந்தவிரலுக்கெல்லா மோதிரம்பூண்டேன், சுங்குவிட்டுநாணயமாகத் திருநெல்வேலிச் சோமனையுடுத்திக்கொண்டேன், சோமன்மேற் பச்சைவச்சிரங் கெம்பிழைத் தழகாயிருக்கும் பட்டயரை ஞாண்மகிழ்ந்து புனைந்து கொண்டேன், உச்சிதமாகச்சுத்தச் சரிகைதிப்பட்டா வொன்று ஒயிலாகவே தோள்மேற் போட்டுக்கொண்டேன், ஒருகாசுங்கவி

ஞருக் குதவாதனுத்தப்பேய்கள் உடல்கிழித்திடும் பாங்குகையிற் கொண்டேன், அரும்புலவரைமதியாத நிர்மூடரைஅடிக்குஞ் செருப்பென்றன்காலில் மாட்டிக்கொண்டேன், ஐங்காதம்வீசும் ஜவ்வாதுபுனைந்து கொண்டேன், ஆண்டியையழைத்துக் கொண்டேன், அவன்கையிற் சிங்காரவெள்ளிலைப்பாக் கேலஞ்சாதிக்காய் கிரும்பு சேர்த்தொருமூட்டையாய்க்கையிற்றந்தவுடன், மீசைமுறுக்கிக் கொண்டு சொகுசுடன் வேடிக்கையாயவேசி, வீதியில் நடந்தேன் நான்மகாராஜ வடிவுடனே குதராசவல்லிவளவில் நடையினிற் போய் நின்றேன், அங்கேயொருதாதிபார்த்தோடியந்தத் தாய்க் கிழவியோடன்று சந்திராரந்தந்தனர் வந்தனரென் றோதும் போது தள்ளாடி இரைத்திரைத்துத்தடியை யூன்றிக்கொண்டு கதவி னோரத்திலே யிருந்துகொண்டு மெத்த நாணமுற்றுச் சொல்லுகிறாள், என்துரையே வந்தீரோ உமதுபாதம் வருந்த வித்தனை தூரம் நடந்துவந்ததே, யெங்கள் மாதவந் தானல்லவோ அருமைபெருமை தெரிந்த சாமிநாங்கள் பிழைத்திடும் பொருட்டாகத் தெரிசனந்தந்தீரே, எங்கள்மேற் பரிவுடன் வந்தபோதே நாங்கள் செய்ததேவெகுபாக்கியந்தானல்லவோ, தட்சணகெவுளி பலிக்கினதும் ஆந்தைகிளை கூட்டினதுங் கனவுநான் கண்டதும், மற்றுநாள் விவரமதாகவிந்தைக் குடுகுடுப்பைக்காரன் மெய்யாக விளம்பினதும், முந்தாநாள் மலையாளத்திலிருந்தோர் தம்பிரான் வந்தெந்தன் மகளுக்குச் சொன்னதுவும், அன்றுதானே நிலவரமாகுமப்பா ஜோசியரிரண்டுநாளில் நினைத்தது லபிக்குமென்றே சொன்னதுவுங், குறத்திசொன்னகுறியு மென்மகள்தானே நெல்லுக்குக்குறிபார்த்துக்கொண்டதுவும், இன்றைக்குச்சிறப்புடனே யிந்தக் குறியின்பலன்களெல்லாஞ்செயமாகக்கண்டேனென்றாள், எங்கள் குலதெய்வ முமதுசித்தந், தனிலிருந் தெங்களிடஞ்சேர்ந்ததே நேர்த்தியென்றாள், இனியிந்தவையகந்தனிலெங்களுக்கிணையாகவும் மாதர்களுண்டோ வென்றாள் இனிப்புள்ள சீனி சருக்கரையுங் காட்டினிலிருக்குஞ் செந்தேனுந் தினையுங்கலந்தாற்போ, லெம்மடமானு முன்னைக் கூடிக் கலந்திருக்கச் சுகிர்த மட்டில்லாமற்செய்தாளோ திவ்விய மாமருதமலரும்போற் பாலும்நீரும் போல், மருவியிருக்கலாங்காண், தேவரீர் பருவத்துக்கும்என்மகள் பருவத்திற்கு மீடாகப் பார்த்தயன் சிருட்டித்தானே, வென்றன் கட்டிக் கரும்புக்கேற்ற வாசைக்கண்ணாளா விண்ணிற்கதி

ரோஜனக் கண்டகமலம்போலும், வானில்விட்டிலங்கு மின்னலைக் கண்ட கேதகைபோலும், வெண்ணிலவினைக்கண்ட குமுதம்போலும், அகமகிழவேதோ வென்மகளும்யானுஞ்செய்த அதிஷ்டம் அல்லோ அதிஷ்டம், கோயிலிலென்மகள் உம்மைக் கண்டபோதே,மதிமயங்கியடங்காமையல்தானேகொண்டாள்,அன்றுமுதல் விகசிதமா மலர்புனையாள் நவரத்நவிலைமிகும் பணிபுனையாள், கெஞ்சி கெஞ்சி அகமகிழ்ந்தன்னமும் பாலுநா னூட்டினும், அருந்தாள்பாயிற் பொருந்தாள், சற்றுநேரம் இருந்திடத்தினிலிராள் வெறிகொண்டாற்போ லெண்ணுதும் எண்ணிப் பெருமூச்சுவிடுவாள், தோழிமார்கள் இருந்தென்னவென்றயர்வாள், கலைவளை சோர்வாள் எந்தனுடனும்பேசாள், கண்மணியே இந்தவகைஎன்னடி சொல்லென்று கேட்கினு, மென்னிடத்தினுஞ் சொல்லாள் வளர்த்திநான் விந்தைசொல்லுகிறே னென்றெண்ணுதீர் இதுவுந் திரு வுளத்தின் செயலோ, யென்மகள் ஒன்றுமறியாதவள் புத்தியறிந்தமுதல், ஒருவரையுமறியாள் தேவதாசி எந்தன்வளவில் வரும்புருடர் முகத்தைக்கண்ணாலேறவும் பார்த்தறியாள், வேசிக்குள்ள நடக்கையுமறியாள், உபாயமாயவித்தை லேசமுமறியாள் நான்வெகு திடத்துடன் போஷித்த செல்வவளர்த்தியினால், தேகஞ்செழித்துவளர்ந்தாள், நான்பெற்ற கோதைமிகவும்மைபேதை நம்பினுமும்மைக்கூடி ரட்சிக்கவேண்டும, விலைமாதர் சாதித்தொழில்.விந்தவீதியிலுள்ளமின்னார் கற்பனைசெய்துகலைப்பார்,துணிந்தவர் போதனையுங் கேளாமற் கபடில்லாவென்மகளைப் புணர்ந்து மகிழவேண்டுந், தயவுற்றுப் பேதமில்லாமலன்றிற் பட்சியைப்போ லெப்போதும் பிரியாதிருக்கவேண்டும், இப்படிக்கு நித்த மதன் ரதிபோல இருக்கக் கண்காட்சியென்று நீலிக் கிழவிசொன்னாள், எழுதிய சித்திரப்பொற்பதுமைபோல் சித்தமிக மயக்குஞ் சிறுக்கிவந்தென் முன்னேநின்றாள்.

விருத்தம்.

நதிமதியணியுமஞ்சனாட்சி மணாளர்க்கச்சூர்ப்<br>
பதியமிர்தத்தியாகர் பரிவுகூர்ந்திடுநன்னாட்டில்<br>
மதிநிகர்வதனங்கொண்டு மதராஜவல்லியந்த<br>
ரதிநிகரன்னமெல்ல நயந்தருகினில் வந்தாளே.

திபதை-இராகம்-சங்கராபரணம்.

வேளுக்குவச்சிராங்கியோ இவளந்த மேனகையோ வெண்முலை மாநகையோ, வாளுக்குநிகர்விழியோ வரிச்சிறை வண்டு

மொய்க்குங் கொண்டைக்கந்த கொண்டல்நிகரோ, இங்கிதச்
சிலைநுதலோ மாவதன இந்துவினிற் சிந்தூரப்பொட்டிட்டவழ
கோ, எங்குந் தித்திக்குங்கரும்போ ஆடவர்கள் எண்ணுடியோ
கன்னங்கண்ணுடியோ, சுந்தரவள்ளைச் செவியோ பரிமள சுக
மலர்நாசி செண்பகமலரோ, இந்திர கோபத்திலும் நிறமிகும்
இன்பப்பவளமோ இதழ்செம்பவளமோ, கந்தரம்வலம்புரிச்சங்
கோமிகுந்த சுகந்தகுங்குமத் தரிக்கும் விந்தைமுலையும், மந்தர
மாமலையோ இரசமிகு மாங்கனியே வரும் பூங்கோங்கிணையோ,
பூரணகும்பங்களோ மிகுந்த பொற்புறுஞ் சித்திரமணிச் செப்பு
களோ, வாரணியிளநீரோ மாமதனன்வண்ணமுடியோ வென்னு
லெண்ணமுடியா, விருகைகள் பங்கயமலர்நிகர் என்னலா
மிடையொளிர்மின்னலாமே, திருவுந்திநீர்ச்சுழியாம் வயிறு சித்
திரமாம் வடபத்திரமாம், உருவிலியரண்மனையைத்தேன்கூடென்
றெப்பிடலாமதைச் செப்பிடலாம், மருவுஞ்சவ்வா தொழுகுந்
தாரைநிகர் வாகையுறுஞ் சிறுரோம ரேகையாள்காண், நத்தித்
தபோதனரும் மயங்கிடு ரம்பையெனலாந்தொடை அரம்பை
யென்னலாம், முழங்கால் எத்திசையினும் அலவனுக்கிணையாம்
இவள் ரதிக்கு மிணையாமே, கருத்துடன் சொல்லவென்றால் இவ
ள்கணைக்காலிணையே நல்ல வராலிணையே, செருக்கிக்காமுகர்மகி
ழச் செம்பஞ்சுதீட்டும் பதத்தாளிதங் காட்டும் பதத்தாள், திவ்
வியபத்தரைமாற் றுரையாத செம்பொனையே நிகர், கொம்பனை
யாள், எவ்வளவென் றுரைப்பேன் அவள்மெய்யில் இட்டரத்நப்
பணிகளு மட்டுமிதமோ, எவ்வனத்தின் சுந்தரமும் பால்கற்கண்
டினிதுமினிய ரசக்கியமொழியும், சவரையுமதிமயக்குஞ் சுந்தர
விந்திரவர்ணச்சேலைசொல்ல என்தரமல்ல, அன்னம்போல் நடை
நடந்து கைலாகரிவையர் கொடுக்கவென்னருகினிலே நன்னய
மாகவந்தாள் காமிநல்ல நட்டணைசெய்தாள் பரி வட்டணைசெய்
தாள், மலர்வாய் திறந்தங்ஙனே கூடத்தில் வாருமென்று ளுட்
காருமென்றாள், நலமாக வென்னை வைத்தாள் சிங்காரரத்ன கம்
பளமேன்மலர் மெத்தைமீதில் வெள்ளிக்கமலந்தனிலே பாக்கு
டன் வெள்ளிலை வைத்தாளென்னை யுள்ளிலேவைத்தாள், தள்ளா
மற் சகியுமவள் சொற்கொண்டு ஜாதி முறைப்படியேலஞ் சாதிக்
காய் வைத்தாள் ஐந்து பணத்தைக் கையிற் கொடுத்தந்த ஆண்
டியைப்புரத்தினிற் றூண்டவைத்தாள், புன்சிரிப்புடனுவள்வாள்

சாமிநான் யனுபோகித்ததில்லை சித்தம்வரவேண்டுமென்றே, உப
சாரம் செய்திடுங் காமுகரை வைத்திடுவேன், வெற்றிபெறும்
ராசர்வந்தால் எதிர்நின்று விழித்தறியே னொன்றும் வழுத்தறி
யேன், என்தாய் தோழியைவிட்டுப் புத்திசொல்லி ஏகச்சொன்
னாள் றாசம்வரப் பேசச்சொன்னாள், வந்தார் சோபனத்துக்கு
நான் செய்யமாட்டேனென்று சண்டை போட்டேனே, விலைமா
தர்கள்வந்து உனக்கிந்தவித்தையிருந்தேன்என்ன புத்தியிருந்தே
ன், இலகிய அழகிருந்தேன் குலத்தொழில் எவ்வளவுமில்லையென
உள்ளபடியே வைதுகொண்டேயிருப்பார்அதனால், வாடியிருந்தே
னொருபேடிபோல நான்செய்தபூஜாபலத்தால், நீர்வந்தென்சித்த
மயக்கிமெள்ள சுற்றிக்கொண்டீர், நித்தியமுமைப்பிரியேன் உம்
முடைய நேசமே அதிகவுல்லாசமாமே சத்தியமாகவுரைப்பேன்
நீரெனைத் தான்பிரிந்தாலுயிர்போம் பிரிந்தே அறிந்தென்னைக்
கைவிடாமல் சோபனஞ்செய் தாண்டுகொள்வீரென்னை வேண்
டிக்கொள்வீர், குறையேன் எனக்கினிமேல் உம்முடைய குண
மேயாயிரங் கோடிபணம்பெறுமே, அகமகிழ்ந்தினிவாருங் கேளி
அறையிலென்றாள் இனி மறைவிலென்றாள், விகஜிதபரிமளமாம்
மலரணைமீதிலேறினன் மிக காதலுடனே, இந்திர விமானங்க
ளோவதனில் இதமுறச் சுற்றிலும்பதுமைகளோ, சந்திரகாந்தக்
கற்கள் அழுத்திமேல் சந்தனமெழுகியமந்தரமோ, உட்சுவரினிற்
சூரியகாந்திப்பட் டொட்டினழகோ மேற்கட்டினழகோ, வெள்
ளிக்கொலுசுகளோ தூங்குமஞ்ச வேடிக்கையோ துகிற சோடிக்
கையோ, பொற்சரிகைத்திண்டுகளோ மலர்ச்செண்டுகளோ முற்
றிலு மலர்ச்சரத்தினாற் சோடித்த முச்சட்டைகளே புறவின்மெச்
சட்டைகளே பச்சைப் பசுங்கிளிகள், வைத்திருக்கும் பஞ்சரங்க
ளோ மொழியு மின்சுரங்களோ, உச்சிதபடிக்கம் வைத்ததோ
இந்தப்போகம்போல் ஒருவருக்குங் கிடைக்கஅருமையதே, சவ்
வாது கஸ்தூரியும் புழுகும் சந்தனமும் பூசியவள் வந்தனஞ்செ
ய்தே செவ்வரி படர்ந்தவிழியாற் கலவியின் சீர்பேசினாள்பனி
நீர்வீசினாள், மனமிகமகிழ்ச்சியதாய் வெள்ளிலைமடித்துத்தந்தாள்
பாதி கடித்துத் தந்தாள் வினவவே சுரமண்டலி தந்தியை மீட்டி
னள் முகநயங்காட்டினளே, பச்சையானபதங்கள் இச்சையாய்ப்
பாடினள் ரசத்தில்ஊட்டினளே, கச்சணியிறுகத்தழுவி நானகாமி
யென்றாள் முத்துச்சாமியென்றாள், கன்னத்தில் முத்தமிட்டாள்

என்றன் காசுகளெல்லாம்பறிக்க வேசியவள், பலபல மோகஞ் செய்தாள், தினமும் பாங்காகவே ஏமாற்றினள் நீங்காமலே, பால்பழ மிட்டாய்லட்டு, இன்னும், பண்புறுபோசன மின்புடனே, பலகாரவிதமனேகம், நன்றுய்ப்பாயாசமீந்தனளென் ஆயாசம் நீங்க, பழவகையனேகம், சுவைப் பலவுடன் கதலிமா நலமுடனே, ஆரஞ்சி கிச்சிலியும், கொய்யா அன்னுசிபேரியத்தி சொன்னலுமே, வாயுடன் கைருசிக்கும் இன்னுமின்னும், வகையுறு பண்டங்கள்தொகையுடனே, எந்நேரமுங்கொடுத்தே மகிழ்ச்சியிலீடுபடுவாள் வெகு பாடுபடுவாள், பஞ்சணை மெத்தையிலே மிக பட்சமுடனே நல்ல இச்சையுடனே, மோகத்தை மிகவூட்டி, உயர்ந்த, சேலை பாவாடை ரவிக்கை வேலையதாய், வாங்குவாள் பலதினுசு, என்றனது, பணமெல்லாங் கொள்ளைகொள்ள மனந்தனளே, ஆபரணங்கள் செய்ய, நாளும் ஆயிரம் ஆயிரமாய் நேயமுடனே, பொன்னெல்லாம் வாங்கினளே, பலபல கச்சாயமும், முந்திரிப்பருப்பும் பாலும் லட்டும் விருப்புடனே, பொசித்தேன் விடிந்தபின்பு, குளித்திடப் போசனந்தருவேனென்று ஆசனந் தந்தாள், ஆசைக்கறியிலையில் வைத்தே அன்னமிட்ட ஆசையெண்ணலாஞ் சிவனைப் பூசைபண்ணலாஞ், சுற்றிலும் வைத்த கறியின் விதங்களைச் சொல்லமாட்டேன் தின்று வெல்லமாட்டேன். பத்துநாட் கைமணக்கும் நெய் தயிர் பரிந்திட்டனளே தினமும் விருந்திட்டனளே.

### விருத்தம்

இப்படியென்னுடன்கூடிப் புணர்ந்துவல்லி
　　இருநிதியைப்பறித்தது மல்லாமலென்முன்
மெய்ப்புடனேயாடவர்க டம்மைக்கண்டால்
　　வெடுவெடுத்துப் பின்னவர்கைப் பொருளுங்கொண்டு
செப்பிடுவித்தையின்மருட்டுஞ் சங்கிலிப்பூட்டின்
　　செய்கையும்போல் தாய்மகளுமாகக்கூடிக்
கைப்பிடியாய்ப்பிடித்தென்னை யடிமைகொள்ளக்
　　கலந்துமருந்திட மனதிற் கருதினரே.

இதுவுமது.

எப்படியோ மருந்துவைத்தார்
　　ஏமாந்து போனேனன்

மைப்படியுங் கண்ணாலே
மருட்டினு ளெந்நாளும்
செப்பிடுவித்தைக் கார்போல
சிலதினத்தில் பொருள்பறிக்க
தப்படிகள் பலவெடுத்தாள்
சாற்றிடவு மொண்ணாதே.

இதுவுமது.

ஐயையோ நான்திருடி ஆழத்தில் புதைத்துவைத்த
உய்வுறுமென் பொருளெல்லா மோடிநானெடுத்து வந்தே
தையலாலவளுக்கீய சதிக்காரி பலவகையாய்
செய்யவாய் மொழியாலே சீக்கிரத்தில் வாங்கினளே

இதுவுமது

பூவாடைக் காரிக்கென்றும்
போர்மதுரை வீரற்கென்றும்
பாவாடை ராயற்கென்றும்
பனைமரத்து சாமிக்கென்றும்
நோவாடை தீர்க்கின்ற
நொண்டிதெய்வ மதற்கென்றும்
வாய்வாடை பேச்சினாலே
வாங்கிநிதங் கரைத்தனளே.

திபதை.

இனிகையிற் சிக்கினான் ரொக்கமுங் குவிக்கலாமென்றே, மனதுமகிழவுகந்து பொருளெல்லாம் வாங்கித்தொடுத்தாள் கலி நீங்கத்தொடுத்தாள், மோகனமாலைக்கென்றும் தொங்கல் முத்துக்கென்றும் மூக்குத்திக்கென்றும், வாகுடன் கட்டாணி முத்துமாலைக்கென்றுஞ்செம்பே னேலைக்கென்றுஞ், சிங்காரமே மிகுந்த பட்டுச் சேலைக்கென்றும் தந்தப்பெட்டிக் கென்றும், தண்டை கொலுசுக்கென்றும் நல்ல சதங்கைக்கென்றும் அவள் தங்கைக்கென்றும், கொண்டைசடைப்பில்லைக்கென்றும் காதுக் கொப்புக்கென்றும், பருந்தூப்புக்கென்றுஞ், சலவைச்சல்லாவுக்கென்றும், செம்பொற் றட்டுக்கென்றும் கால்மெட்டுக்கெ

ன்றும், அலங்காரமானகைக்குச் செம்பொன் ஞழிக்கென்றும் ஐந்நாழிக்குண்டே, அளந்தேகொட்டிக்கொடுத்தேன் செம்பொன் அன்புடன் வாரினள் தென்புடனே, வளந்தானறிந்துகொண்டாள் என வாயனென்றே மிகுபாயஞ்செய்தே, நட்டுவக்குட்டிக்கென்றுள் அதற்கு நானூறுபொன் தந்தேன் மானமுடன், பொட்டுச்சவ்வாதுக்கேன்றுள் கையிற் பொன்ஞறு நூறுதந்தேன் முன்ஞகவே, துத்திகாரப் பையனுக்கென்றுள் நானதற்குச் செம்பொன்முப்பதளித்தேன் இன்பமுடனே, மத்தளக்காரனுக்கென்றும் படிப்புச்சொன்ன வாத்திக்கென்றும் மந்திரமூர்த்திக்கென்றும், பாட்டக ஐயனுக்கென்றும் வீட்டுத் தாழ்ப்பாளுக்கென்றும் சொந்த சிற்றுளுக்கென்றும், காட்டேரிக்கென்றுங் கேட்டாள் நான்மனமுவந்தே அவளரை வெடிப்புக்கென்றே, கொடுத்தேன் மட்டுமிதமோ செம்பொனெருகோடிக்குண்டுமதனன் கூத்தாடிக்கொண்டே, எடுத்தாளொருசூது தாய்க்கிழவி இக்கழுக்குன்றத்திற்கு நாளைக்குப்போவோமென், றழைத்தாள் வாரேனென்றேன் மகளுக் கலங்கரித்தாள்பணியிலங்கமெய்யில், பொழுதுபோனபின்பு மல்லிகைப் பூமுடித்தா ளொருசாமமட்டும், அதற்குள்ளே தாய்க்கிழவி, செலவுண்டாக்கிக்கொண்டாள் வெற்றிலைப் பாக்குக்கென்றும், இதமுறுபுகையிலைக்குஞ் சாதிக்கா யேலங்கிராம்புக்கென்றுபாவித்தென்கையில், பத்துப்பொன் மட்டும்பறித்தாள் சுறுக்காய்ப் பயணஞ்செய்தாள் நல்லவபணஞ் செய்தாள், எத்திதுவென்றறியாமல் நானவளோ டிங்கிதத்துடன் நடந்தேன் பொங்கமுடனே.

### கோச்சகப்பா

வந்தனங்கள்செய்துவந்து வஞ்சிமருந்திட்டுமெள்ள
எந்தனமெலாம்பறித்தே யெத்தாய்க்கிழவியின்னம்
முன்றனமெலாம்பறிக்க முன்னநடவென்றுசொல்லித்
தந்தனமதாகவென்பின் தன்மகளைக்கூட்டினளே.

### திபதை-இ-ம்-புன்ஞகவராளி.

தெட்டிப்பறிக்கமகளை என்னுடன் சேர்த்துவிட்டாள்கை கோத்துக்கொண்டேன், பட்டம்பகற்போற்காயும் நிலவினிற் பஞ்சுமெல்லடியெடுத்துக் குஞ்சரமென்னச், சட்டமுடனேநடந்தாள் நல்ல சரிகைசேலைமின்ன உருவமின்ன, வட்டமதிபோலிருக்கும் நுதலில் ஸீவத்திட்டபொட்டிருகாத மட்டுமணக்க, வனுக்

காயக்காரியென்னுடன் கூடி வழிநடந்தாள்கொஞ்சி மொழிமொழிந்தே, செல்லும்போதினிவழியில் அங்கங்கே சித்தசலீலைகளும் சித்திரமாச்செய்தே, பதினொரு நாழிகைக்குள் கழுக்குன்றப் பதிசேர்ந்தோ மந்தப்பதிதனிலே, நதிபுனையுஞ்சிவனைத் தொழுது கண்ணயிரக்குருக்கள்வீட்டிற்போயிறங்கினோம், விருந்துக்கீராறு பொன்றந்தேன் அதைவெகு வேடிக்கையாகவே செய்துசேடியருடன், இருந்துதன்னிலையினிலே கூட என்னையும் வைத்துக்கொண்டுண்டாள் நன்னயக்காரி, மகிழ்ந்தேயருந்தினபின் வீதியின் மாகனத்துடன்ரிஷப வாகனத்தின்மேல், திகழ்ந்தேயொளிவீசப் பெண்ணிநல்லால் திரிபுரசுந்தரியோரருகில்வர, வேதகிரீசர்சேவைசேவிக்க வேணுமென்றாள்வாருங் காணுமென்றாள், மாதுடனே நானும்வந்தேன் பார்க்கப்பகல் வத்திவொளிவோ பந்தத்தினொளிவோ, பந்தவிதமெண்ணக்கூடுமோ கம்ப பாணங்களோ ஆகாய பாணங்களோ, அந்தணர் சிந்தைமகிழ்ந்தோதிய ஆரணமோ மகர தோரணமோ, வரிசையாயிருபுறமும் வரும்ஆலவட்டங்களோ குடையின் திட்டங்களோ, அரிவையர் நடிப்பதுவோ மத்தளம் அடிப்பதுவோ பதம் படிப்பதுவோ நாகசுரத்தோசைகளோ முகவீணை நாதங்களோ மிகுவினோதங்களோ, வாகுடன் டமாரமேள ஒலிகள் வானளவுமே அதைநானென்னசொல்வேன், அரகரவென்போருஞ் சிரசின்மேல் அங்கைகுவித்தேமிக வணங்குவோரும், வரமருளென்போருந் தன்றுயர மாற்றுவோரும்நின்று போற்றுவோருஞ், சாமியையிப் படிபணிந்தார் நான்வேசைச்சாமியே சாமியென்று மாமகிழ்வுற்றேன், தீமைசெய்யவோநினைத்து அங்கேயொரு செடிமறைவினில்வெகு கடிதுடனே, பொக்கவாய்க்கிழநீலி மகளுடன் போய்வாரேன் குளத்துக்கென்று வாய்வார்த்தைசொன்னாள், அக்கரைக்காரிபோல என்னையந்த ஐயர்வீட்டில் வைத்துப்போட்டுபையநடந்தாள், தோட்டத்தினிலேசென்றாள் பின்னும் வெகுதூரநடந்தாளென்னை ஓரஞ்செய்யவே, பூட்டுத்தங்கப்பணிகளெல்லாங் குறிப்பாய்ப் புதைத்தாளே இந்தவிதத்தாளே,

வெண்பா.

புனமன்றியிந்தப் புவனத்திலென்றன்
தனமெல்லாங்கொள்ளையிட்டசண்டி — இனமெல்லா
மெத்திப்பறிக்க விருந்திடத்திலேயிருந்து
குத்திரமாய்க் கூகூவென்றாள்.

## திபதை-இ-ம்-காம்போதி

பறிகொடுத்தவர்போலே அங்கேநின்று, பதறிக்கூகூவென்று கதறினரே,குறிப்பாயுற்றுக்கேட்டேன், அங்கேயென்ன-கூக்குர லென்றேநடந்தேன் சீக்கிரத்திலே, கட்டிக்கொண்டேயழுதார், இக்கோலக் காரணங்கள்வந்தவிதங் கூறுவீரென்றேன், கெட்டி கெட்டிநன்றாச்சுது, கூப்பிட்டது கேட்கவில்லையோ உன்னிட வாழ்க்கையிதுவோ, உன்னைநம்பிவந்துவிட்டோமே எங்களை, உத்தரித்துவிட்டாய்வெகு பத்திரமாக, என்மகள் கூப்பிட்டது நன்றாய், எட்டுத்திக்குங்கேட்குமேதிட்டமுடனே,இப்படிக்கைவிடலாமோ நாங்கள்வந், திரண்டுநாழிகையாச்சு அரண்டிடவே, எப்படியோ சோரன்வந்து வேலியில் இருந்தெங்களைச்சுற்றிக்கொண் டுரிந்த விதம், கண்டோம் நினைவழிந்தோம் போனபின்பு, கையைப்பார்த்தோம் எங்கள் மெய்யைப்பார்த்தோம், துண்டன் சோரனவன்சொக்குப்பொடி, தூவியேபணிகள்யாவுங் கைக்கொண்டான், இனியெப்படிபிழைப்போம் உன்பிறகே, இட்டுவரப் பணிகளெல்லாம் இட்டேன்மகட்கு, உனைத்தொட்டின்றிழந்தோம்பூமியிலிவ், வுடைமையைப்போலினி உடமையுண்டோ, வெங்கடராமேந்திரன் பாட்டுக்கு, மெச்சித்தந்தசந்த்ரபிறைலட்சம்பொன்பெறும்,வேங்கடாத்திரிநரசு தந்ததொரு, வேடிக்கைப் பதக்கமொருகோடிப் பொன்பெறும், ராசராசர்தந்த நகைகள் குறைந்தாலும் நாலு கோடி பொன்பெறும்வாலையிலேநான், நேசமுடன் தேடினபணி கணக்கிட்டு நெகிழ்த்தப்போமோ இந்தஜகத்தினிலே, ஆவியெப்படித்தரிப்பேன் என்றுவாயில், அடித்துக்கொண்டாள் வயிற்றில் இடித்துக்கொண்டாள், பாவிமகளுக்கிட்டு பணியெல்லாம், பறிகொடுத்தேன்நானும் வெறிபிடித்தேன், என்று தேம்பியழுதாள் மகளதற் கேற்றாப்போலே யழுதால் பார்த்திருப்பேனோ, நன்று நன்றுநானிருக்க நீங்கள்மெத்த, நலிவானேன்நொந்து மெலிவானேன், ஒன்றுக்கு மூன்றுதருவேன் நீங்கள்கண்ணீர், உதிர்ப்பானேன் விதிவிதிர்ப்பானேன், என்றுகண்ணீர்தனையே துடைத்தனன், என்னுடைய வேட்டியினால் பின்னைக்கூட்டிப்போய், வீட்டினிலேவிடுத்தேன், முன்புதைத்தவிடந்தேடி ரத்நப்பொன்னுடமையெல்லாங், கூட்டியே யெடுத்துவந்து நான்கொட்டிக் கொடுத்தேனவள்சொற்படி திடத்துடனே, குறைவா யிருந்தபணிக்கு நான் பூண்டு, கொண்டிருந்தபணியெல்லாம் ஒன்றொழியாமல்,

நிறையாக ஈந்துவிட்டேன் தாய்க்கிழவி, நீலிபோலென்னை அநு கூலமாக, தோத்திரமேசெய்தாள் உம்மைப்போலே, துரையா ரெங்களுக்கினி தரைமீதில், ஏற்றமருமகனென்றே நன்றாக எட் டொருநாள் வைத்திருந்தாள் திட்டமதாக, இன்னம் பண்டவா ளந்தன்னை அறிகுவோம் என்றுதன் மகளுடனே அன்றையத் தினம், நன்னயப்பிடாரிதனக்குப் பூசைசெய்ய நாலைந்துபொன் கேட்கச்சொன்னாள் ஜாலக்கிழவி, கேட்டாளெனையந்தமின்னாள் இனியாரைக் கெஞ்சப்போறோமென்றுநா லைந்துபொன்னுக்குப் போட்டிருந்த மோதிரத்தை நான்விற்றுப் போட்டேனவள் கைதனிலே வாட்டமின்றியே, இனியொன்று மில்லையென்று தாய்க்கிழவி எடுத்தாள் மகள்மேல் துஜந்தொடுத்தாள், சனி பிடித்ததுபோல இவன்மாயந் தன்னில் சிக்கிக்கொண்டாய் உனக்கென்னமதியோ, ஆர்வந்தாலும்பேசாய் தினமவன் அண் டையி லிருக்கிறாயே பெண்டுபோலவே, பேர்பிரபலங்கெடுத்தாய் இந்தப் பிச்சைக்காரப் படுவான்மேல் இச்சைகொண்டாய்நீ, செ ம்பாலடித்தகாசு இந்தமட்டுஞ் செய்திருப்பானோசகாயம் பெய் திருப்பானோ, வம்பாகஇந்தக்கள்ளன வலையினில் மாட்டிக்கொ ண்டாயென றுதிட்டக் கேட்டெழுந்துநான், மாமிமாமி யென்னை யிப்படி நீங்கள்சும்மா வையலாமோ கோபஞ்செய்யலாமோ, பூமியில்தானடுக்குமோ மகளுடன் பூசலாமோ என்னையேசலா மோ, பரிந்துபரிந்துபேசும் உங்களிட பாசம்போமோஎந்தன் ரோசம்போமோ, கரிசனமாகக்கேட்ட பொருளெல்லாம் கட் டிக்கொடுத்தேன் மிகக்கொட்டிக்கொடுத்தேன், மனத்துக்கிசைந் தமுத்து மாலையும் மாகனகத்திற்செய்த மோகனமாலை, கனத்த ரத்நப்பணியும் கொடுத்தது கணக்கிலையே உனக்கு மணக்கிலை யே, நன்றிகெட்டக்கிழநீலி உனக்கிது ஞாயமாமோ தெய்வ சகாயமாமோ, என்றவுடன் திருப்பாட்டை முகஞ்சுளித்தெடுத் துக்கொண்டாள்சண்டை தொடுத்துக்கொண்டாள், ஒருநாள்வரு வதுபோல் வந்துமெள்ளஒட்டிக்கொண்டாய் எங்கள்பாவங் கொ ட்டிக்கொண்டாய், பருவத்தில் எந்தன்மகளைக் கைவசப்படுத்தி க்கொண்டாய் அருகிற்படுத்துக்கொண்டாய், வேறுமுகம்பாரா மல் ஒருநாள் விருந்தையிட்டாய் அதில் மருந்தையிட்டாய், வா றுகளெல்லாமறிந்து மெத்தமோக மாயஞ்செய்தாய் நல்ல உபா யஞ்செய்தாய், உச்சிதமாப்பிள்ளைமாரை வாராமல் ஓட்டினாயே

வறஓட்டுநாயே, விசித்திரம் பேசாதே மகளுக்கு மெச்சிக்கலே யீந்ததுண்டோ எச்சிற்கலேயே, மோசத் தொழிலேநினைத்து நீயதிக மோகங்கொடுத்தாய் மேகரோகங்கொடுத்தாய், ஆசையாயின்னமின்னம் என்மகளை ஆளவந்தாயோநீபோடா ஊளைநுளையா, மனதுக்கேற்கநடக்கும் இங்கித வரிசைகண்டாய் என்மகள் உரிசைகண்டாய், குறுகிநீ இங்கேவந்தால் பழமுறமும் கொடுப்பேனே உன்னைக் கெடுப்பேனே, இன்றையவரையிலுன்னால் காசளவு இன்பமறிவோமோபோடா வம்புமுறியா, வென்றிடக்கூடாது நடவென்றால் மெள்ளப்பயில்பேசுகிறாய் கள்ளப்பயலே, ஆயிரமானாலும் உனக்கிங்கே அடுக்காதடாபோடா படுக்காளி, வாயினிற்பகட்டாதே உன்மதம் மட்டிடாதோ பவிஷ்கெட்டிடாதோ, வேண்டிக்கொண்டென்காலில் இப்போதுநீ விழுவானேன் நாக்குவிழுவானென்றாள், ஏண்டிசண்டாளியென்று குலேயினில் எட்டியுதைத்தேன்சிறுநீர் விட்டுவிடவே, தோஷிக்கிழவிதன்னை பாசமறத் தூற்றினேன்கைமண்ணைவாரித்தூற்றினேனே, வீசிக்கிழவியெழுந்தாள் அடித்தென்றன மேலில்விழுந்தாள் குருக்கள் காலில்விழுந்தாள், தெருவெல்லாங்கூக்குரலிட்டாள் ஒருத்தரும் திக்கில்லேயோ வென்றுவிக்கி விக்கியழுதாள், குருக்கள் ஆதிமூர்த்தி இவரால் கூட்டினளே சமுகம் தாட்டியாக, காமேஸ்வரகுருக்கள் பஞ்சாட்சரகுருக்கள், சோமேஸ்வரகுருக்கள் பிள்ளையுஞ் சுப்ரமண்ய குருக்களும் அற்புதமாக, சாஸ்திரத்தினில்மிகுந்த கும்பலிங்க சாஸ்திரியாரும் நாகலிங்க வாத்தியாரும், போற்றிய கோயிற்கணக்கு சாமிபிள்ளை புத்தியினில்மதிமந்திரி உத்தமவேளும், ஈரெட்டுக்கால்மண்டபத்தில் இவர்கள் எல்லாருங்கூடினர் உல்லாசமாய், போரிட்டதாய்க்கிழவியை கேட்கும்போது பூராயமாவிகாரம் ஆராய்ந்துசொன்னாள், அழைத்தாரென்னையருகில் நானும்மெத்த அன்புடனேசென்றெதிரில் கும்பிட்டுநின்றேன் அழித்தாய்பணத்தை யெல்லாந் தாசிவீட்டில் ஆனைகட்டினலுமிந்த மாநிலத்திலே, அவளதென்றேயுரைப்பார் பழங்கதை அறியாயோ சற்றுங்கிறியாயோ, இவள்பஞ்சபாதகியென்றேநீர் எட்டுத்திக்குஞ் சொல்லக்கேள்விப் பட்டதில்லேயோ, தப்பிலித்தாய்க் கிழவி செய்திடுஞ் சதியறிவோமவள் மதியறிவோந், தப்பிநீ அவளைவிட்டு வந்ததுன்றன் தந்தைசெய்த புண்ணியமென்றார் விந்தையுடனே,

விருத்தம்.

குருக்கண்மார் சொன்னபடி நிசமென்றே யென்மனதிற் கொண்டேன் பின்னு, மருக்குழலி மதராசவல்லியிட்ட மருந்தெனது மனதைமெத்த, வுருக்கவவள்மே னினைவேநினைவாகத் திருமயிலையூரைநாடித், தெருக்கடந்து நானடந்த வாறும்பின் னடந்ததுவுஞ்செப்புவேனே.

திபதை இ-ம் வராளி.

திருப்போரூரைவிட்டேன் தாய்க்கிழவிசெய்த்தெண்ணி னையனைய பையநடந்தேன் மருப்பூர்சீர்கருணவேலாயுத மாலினிடசோலைநீள விசாலமான, சத்திரத்தினி லிருந்தேன் ஒருநாள் சட்டமுடன்கிச்சடிசெய் திட்டமோடுண்டேன், மற்றைநாள்பயணமதாய் அவள் மோகம் மாட்டிக்கொண்டு பாட்டைக்கொண்டு மூட்டைக்காரன்சாவடியினில், தங்கினேனைந்துநாள்அதில்கொல்லர் தாட்டிகமாய்மூட்டைகட்டி போட்டுக்கொண்டார் பணத்தை, அங்கனே சாடையறிந்தேன் கையில்வர அட்டியே னிருட்டும் வர விட்ட தல்லோதெய்வம், அரண்டவர் தூங்கினபின்வேளைப்பார்த், தக்கணமேமுக்கியமாஞ் சொக்குப்பொடிதூவி, பிரண்டிடாமலெடுத்தேன், ஆறுபேருக்கொருநூறு பத்துளச்சீருளவராகன் பைபையா யகப்பட்டது கையிற், றாக்கிப் பார்த்துக்கொண்டு கூத்தியாரைச்சேர்த்தணையலாமென்று, ஒய்யாரமாய்த் திருப்பினேன் பாட்டைவிட்டு, ஓர்வழியை நேர்வழியாக்கூர்வழியாள் தன்னை நினைந்தே, சுறுக்கில் வந்தே போரூரில் நேசமத ராசவல்லி பேசினுற்போதும், அவள்மனைக்கே செல்வோமென்று அந்தவீதி வாறபோது வேறுசெய்த பூரிக்கிழவோரி, ஏசியென்னைத் துரத்தினதுஞ் சற்றுநான்எண்ணாமல் விண்ணாணப் பெண்ணாசையாலே, வேசிமதராசவல்லியின் வீட்டிற் சென்றேன் நாட்டமதாய்க் கூட்டமில்லாமல், பார்த்தாள் பக்கத்திற்பையைத் தாய்க்கிழவி பரிவொடு ஒருமையாய் மருமகனே, மெத்தப் பேய்த்தோஷியுநானே மதுவுண்டபித்தத்தினுற் பினத்தினேன் எத்தனையோ, அறியேன் சித்தமறிந்துரைத்த தல்ல உம்மாணைசித்தம் பொறுத் தென்னையு மிரட்சித்திடவேவேண்டும் உத்தமதுரையாச்சே உம்மைப்போல், உலகினினிகர்சொலவில்லையெவர்தானு, நித்தியமுமைத்தானே என்மகள் நினைத்து நினைத்துமிகமனத்துயராகி, சித்தம்பிரமித்துநின்று நீர்போன திசையைப்பார்த்துப்

பார்த்தசைவின்றி, நின்றுகாணுமலேவாடி என்பெண்மெய்யுங் கரைந்து கரைந்துன்னமுமருந்திடாள்தானே, பூணாரமும்பூணுள் நீர்சொன்ன போதனையோவிதுசாதனையோ, வேதனையென்சொல்வேன், படுப்பாளெழுந்திருப்பாள் சீதமுள்ள பன்னீரைவீசிடினும் வெந்நீராய்க்காய்வாள், விடுத்தாளெங்களாசை, மாது வற்றி மெலிந்தாள்வந்ததே நன்றாச்சுதென்மகளை, வைத்திருந்துமெச்சியுயிர்ப்பிச்சைதரவேண்டும் சந்தோஷமாச்சுதென்றாள், சிறுக்கியுஞ்சட்டமுடன்கிட்டவந்து, நெட்டையிட்டுத்திட்டினாள் கன்னத்திலேகிள்ளினாள், உன்றனெஞ்சு கல்லாக்கி சொல்லாமல் வல்லாண்மையாக, என்னமாய்ப்பிரிந்திருந்தாய் என்னைவிட்டிப்படிக்குத்தப்படிஎடுப்பதறிந்தால், நான் கொஞ்சமாகிலும்பேசேன் என்நுனைக்கூடிவிளையாடியிந்த மோடிசெய்து, வேறுவஞ்சிதனைத் தொடலாமோமிகவும் வஞ்சமென்னத் தஞ்சமென்றானெஞ்சிசிரக்கமில்லையோ, வாடாசாமியென்றாள் மெத்தையில்வைத்தெனையணைத்தே யொருமித்தே யொருமுத்தந்தாடாயென்றாள், முன்செய்ததுசற்று மென்மனத்தினினைத்திடேனென்றாள், மரியாதையைவிட்டாள் தருணை மாட்டிகொள்ளென்றாட்டியென்னைக்கூட்டிமிகக்கொண்டேசரீபோகம் வருந்தினாள், இப்படிக்குச்சம்ப்ரமமுடன்தென்புடனே இன்பமனுபவித்தபின், பறித்தாள் காசையெல்லாம் முன்னிலும்பத்தத்தனை யெத்துசெய்துமுற்று மதராசவல்லி, வெறுத்தாள் கைவரண்டபின் தாய்க்கிழவிக்குனைத்துப்பக்குவமாய் அக்கரையுமாச்சு, வீடுவிட்டுத்துரத்தென்றாள் தாய்கிழவி மெள்ளஎத்தி யென்னைவிட்டுத்தள்ளினாளேவெளியே, பாடுபட்டுத்தேடினபொருளெல்லா மிந்தப் பாவிக்கீந்துயிவிரக்கமேயில்லையென்றறிந்தேன்.

### விருத்தம்.

என்னாசையாலேநான் வெகுகோடிதிரவியங்களீந்தபோதும் பொன்னாசையல்லாமல் மதராசவல்லிக்குப்புருஷர்மீது, தன்னாசைவைப்பதில்லையென்றறிந்தேன் ருய்க்கிழவிசதியுங்கண்டேன், பின்னாசைதனைவிட்டேனவள்வீட்டிற் கன்னமிடவிரும்பினேனே.

### திபதை இம் சௌராஷ்டிரம்

பசப்பிப்பொன்னிரட்டிப்பறித்து விட்டோட்டும், உபாயமறிந்தமாயக்கிழவிசகாயமும்பார்த்தேன், வசப்பட்டகள்ளனானே,

யென்னைத்தானே மட்டில்லாமலே முட்டக்கெடுத்தால்விட்டுவிடு வேனே, எற்குமமாவாசையில் கறுக்கு மிருட்டினுலாசமும் வரட் டுமென்றிருந்தேன்,, திருட்டுக்குச்சமையமென்றே பேருக்கும்ப லன்பார்த்தேன் நடுச்சாமத்தில், புறப்படும்வேளையிலிறப்பினிற் கெவுளி சுறப்புடன்சொன்னதுவுங்கேட்டேன், திருட்டுக்குள்ள ஆயுதங்கள் கெட்டியதாயொன்றும் விட்டுவிடாமல், திட்டமதா யெடுத்தேன், நாட்டமதராசவல்லிவீட்டில் நன்ருய்க்களவுக்கென் றேநேராச் சென்றேனவ்வேளை, வீரசிங்குபாப்புராயவேள், தா ணயம், வெற்றியுள்ளநகரை சுற்றிவிருதுடனே, கஸ்தும்வந்தார் கள் கோரமாங் கண்டாலென்றே, அங்கேயொரு குட்டிச்சுவ ரைக் கிட்டிப்பதுங்கியொட்டிக்கொண்டேயிருந்தேன் அவ்வீதி யவர்தாண்டி, போனபினச்சமில்லாமல் லச்சையும்விட், டிச்சைய தாய் நடந்து, சென்றேனவள்வீட்டி, லோர்சளுக்கன் சென்றுனங் கே நின்றேன்வேளை, அன்றேநான்பார்த்தேன், திண்ணைமேற்ப டுத்திருந்தேன், சிறுக்கிச்சிணுங்கினதுமவள் வணங்கினதும் பின் னிணங்கினதுங் கேட்டேன், நன்றுவிடாதேயென்றே, கெஞ்சிய வள் நற்றினதுமயல்முற்றினதும்மதன் முநான்கேட்டேன், எத்துந்தொழிலென்றறிந்தே னவள்வகை, எல்லாமறிந்தவ னில்லா ததிசெயஞ் சொல்லாதிருப்பேனே, சித்தசன்கேளிசெய்து இ ருவருஞ் சித்திரமாமலர் மெத்தையின்மீதுனின், நித்திரைவேளை யிலே தெர்ளைக்கிவள்வாங்கினுளென்று கன்னக்கோலால், துள்ள விசாரி உள்ளறைவீட்டைக், கொள்ளைமெத்தக் கொள்ளுவோ மென்றே என்றன்மனங், கொள்ளைகளிக்கக் கள்ளழகற்கு உள்ள தனிற் பாதி, பங்கிட்டுத்தாரேனென்றேன், களவுபலித்திடமெத் தக கெலித்திடபத்து செலுத்திடவவ்வேளை பொங்கமாசொக்கு பொடியால் நானிட்டபொட்டதனுலே திட்டமதாகப், பெட்டியி லேயுள்ள பணங்களு,மெடுத்துக்கொண்டேன் பூணும்பணிகளும், உடுக்குந்துணிகளுங்கீரை மணிகளுமுதலாக, பிணங்கள்போற் றாங்கவைத்து, அவள்மாப்பிளையுடமையந்தக் கள்ளியுடமைதுணி கொள்ளைகளேயிட்டுப் பக்ஷமுடனவளும், வெகுநஷ்டப்பட்டா ளினி மேற்கொண்டாள், தெருவில்விட்டாற்பாவ மென்றேகுக்ஷி க்காய் பிச்சையெடுக்க ஓரோட்டுக்குடுவையைவைத்து, அடவுடன் குறையைத், திடமுடனெடுத்திடவே சேர்ந்ததுமலைபோல கலை களுஞ் செப்புக்குடங்களும் பொற்பணிமணிகளும், எப்படி நா

னெடுப்பேன்,நேர்ந்தவத்திகள்கொளுத்தி, கலையெல்லாம்நெருப்பினிலிட்டுகறுப்பில்லாமல், உருக்கினவெள்ளிகளைக்,கட்டிகட்டியாகவெடுத்தேவெண்கலத்தின் கலங்கமில்லாதகலங்கள் தபலைகளைக், குளங்களிலேபோட்டேன் பெட்டியில்மற்றப் பையையவைத்தேன், அவளுட பொக்கசமெல்லாம் அக்கசுநாலே கக்கசமில்லாமல், எடுத்துக்கொண்டவிடம் விட்டுப் புறப்பட் டிப்புறம்பனையூர்க்குப் பந்தலிலே, அப்பணிகளைப்புதைத்தேன்,விடுத்தேன் சஞ்சலமெல்லாம் இத்துடனே, வீரப்பரியொன்று,சோரத்தினுற்கொண்டேருக்குப்போவோமென்றே,அஜரத்நபாபுசாயபுஏறிய அலங்காரப்பரியிலலங்காரத்துடன், கலங்காமற்படியே, இச்சைபெறத்திருடுவோமென்றாசையால், இயலுடன் தெய்வச் செயலையுமெண்ணி மயிலையில்வந்தேனே.

### விருத்தம்.

தாரணிதன்னிற்றேடுங் தனமெலாந்தையலார்கள்
வாரணிதனத்துக்கீவோர் வல்லபக்கிரிகளென்றும்
கூறுவார்பெரியோரந்தக் கொள்கைபோற்குதிரைதன்னைக்
கோரிபக்கிரிவேஷத்தைக் கொண்டனன்றிருடனானே

### தரு-இராகம்-சங்கராபரணம்

ஆளழகனைரணசூரன்மிகு அஜரதுநபாபுசாயபுகெம்பீரன், கோளரியவனுடையவீடு, அண்ட கோளத்தையுமெட்டிப்பார்க்குஞ் சாளரக்கதவை, நாளுந்திறக்கும்சமயம்பார்த்து, வெண்மதிநாடியேபுகுந்தப்புறம் ஓடுமேவெளியே, பாளையஞ்சுற்றிலுமிருக்கும், வெகு பந்துகட்டுக் கேட்டுங்கொண்டேன், சந்துகட்டுமிலையோ, வேளையடிபார்ப்போமென்றெழுந்தே, னப்போவேற்றுருவமாயல்லாவைத் தோத்திரமுஞ்செய்தேன்,தோள்தனிற்சோளிகையைப்போட்டேன், ஒருசுக்குமாந்தடியொன் றிறுக்கிக்கட்டியரையில், கட்கமொன்று கக்கத்தினில் வைத்தேன்பழங்கம்பளியெடுத்துக்கொண்டு தென்புடனேநானும், வெட்கம்விட்டுச்சோரநூல்தெரிந்த, மிண்டன்முடுக்குடையன்கெஞ்சாகுடித்ததனாலே உக்கிரமுடன்கண் சிவப்புகொண்டேன், மிக உல்லாசமாகபக்கிரிகுல்லாவும்போட்டேன், மக்கலாக்காவிக்கலையுடுத்தேன், ஈமெதம்மாத்திரமென்று முல்லாபாத்திரங் கைக்கொண்டேன், முக்கியலோர்மணியிற் செய்தநல்ல மூலிகையைப்போன்றசெபமாலிகை

யெடுத்தேன், சொக்கவிருத்தப்பக்கிரிபோலே சொந்தத் துலுக்கப்பாஷையுங்கூறி யிலக்கணமாகச், சொக்குப்பொடியுங் கையிலெடுத்தேன் பின்னுஞ் சோரத்துக் குல்லாவையெல்லாம், வீரத்தோடெடுத்தேபக்குவமாய் சோளியிலடைத்தேன், வெகு பாசமுடன்சகுனமுநேசமதாய்ப் பார்த்தேன்,மயிலைவிட்டப்புறம்வரவே அங்கே வலியன்கட்டிற்றுடனே கிலிபிடித்தேனே, ஒயிலாகக்கன்னக் கோலைவைத்தேன், அதை ஒருதரம் வலம்வந்து பிறகெடுத்தேனே, பத்தடி அப்பாலே நடந்தேன், அங்கேபாம்பொன்றுகுறுக்கிட்டது வீம்புடனே,யேதோமுற்றிலுமறிவோமென்று சென்றேன், அங்கே முதுமறையொற்றைப்பார்ப்பானெதிரேவந்தான், கெட்டதென்றதனைநான் தள்ளிவரவே, கெவுளிபலுக்கினது விவரமாய்ப், பார்த்தேன் எட்டுநாழிகை செல்லும்வரைக்கும், என்மன மேக்கமதாச் சேப்பாக்கத்திலிருந்தேன், நஞ்சொடு நஞ்சுகலக்கும் பாதிராத்திரிவருமட்டுங் காத்துக்கொண் டிருந்தேனஞ்சாமற், சொக்குப்பொடியாலும் ஆர்க்கும் அகப்படாததிலகம், இருகையினாலுந் திருவல்லிக் கேணியில்வந்தேன், நபாபுதேவடிமுன்னே நகாறுசாவடியருகே ஒருமனதாகவே நின்றேன், அங்கே ஊஸ்தரென்று பாராக்காரன் ரோஷமுடன் கேட்டான், சார்அயாம் பக்கிரியென்றேன், காஞ்சாத்தாவென்றான், நபாபுகனே ஜாத்தேமென்றுரைத்தேன், பீர்பக்கிரிதும்ஜாவென்றான், உள்ளே புறப்பட்டுப்போனேன் சிறப்புடனங்கே உஸன்கானுந் தோஷதல்லிகானும், மிகு உச்சிதமகம்மதுகானும் தாவத்துக்கானும், அஷேனல்லி மாபோஸ்கானும் பின்னும் ஹைதறுகான் காதறுகான் அல்லிகானும், அமிர்தராத்ஹைறங்பாதர் சுற்றும் அமீர்களிவர்கள் யாவருமிருந்தார், சமயமென்றச்சமில்லாமல், அந்தச்சபையினிற்போய் நின்றுசலாமுஞ் செய்தேன், காம்ஹாயாபோலே வென்றுரைத்தார் நான் கல்சேத்தேம்புக்கா தேல்கானவென்றுரைத்தேன்,பயிட்டோபயிட்டோவென்றுரைத்தார், நிமாஷ்பண்ணுகிறவனைப்போல் நான் கண்ணுறங்கினேனே.

கலித்துறை

பத்திரமாகவே நான்வந்தகாரியம் பார்ப்போமென்றுற்
சித்திரம்போல் விழித்திருந்தார் செய்வதேதெனவே
குத்திரமாகவே கஞ்சாமயக்கத்தைக் கொண்டவன்போல்
நித்திரைநான்புரிந்தேன் மெய்யதாகவந் நேரத்திலே.

வேறு-திபதை-இராகம்-சங்கராபரணம்.

தூங்குகிருப்போலிருந்தேன் உட்டோவென்று துலுக்கரெ ழுப்பினுர்குராட்டைகளை, வாங்கிவாங்கிவிடுத்தேன் கஞ்சா மயக் கத்தைச்சகிக்காமல்படுத்தானென்றே,அங்கனேயவர் நடந்தார், சுற்றிலும் ஆருமில்லாமலே நேர்பார்த்தேன், பொங்கமாகவேது ருப்பு,புரவிகள் புதுமையாய்க்கட்டினவிடம்பார்த்தேன்,மேட்டி யாம் ராணுவரும், மெத்தப்பயங்காட்டிக் குதிக்கும் வெள்ளக் காரர்களும்,சோட்டாக்காரர்களும்,ஓரம்புபோட்டாற்றப்பாமற் கொல்லும் பொந்திலியரும், கூட்டாத் துபாக்கிகளைக் கைப்பிடி த்துவேட்டாய்க் கொழிக்குஞ் சிபாய்வீரர்களும், நீட்டுப்பேச்சு மூச்சும்அறியாத, காட்டுமிருகம்போன்ற காப்பிரிகளும்,இருந்தி டுமிடம்பார்த்தேன்,சொக்குப்பொடி இறைத்தேனவர் மயங்கத் திரத்துடனே, பொருந்திய ஏழெட்டுமதில் தாண்டிப்போகலா மென்று லங்கேசிபாய்கள்காவல், நூலேணிமீதேறியே மதிலெல் லாநொடிக்குள்ளே தாண்டினன் திடத்துடனே, ஞாலமெல்லாந் திரியும், பலமுறுநாட்டானையுமிரண்டுங் காட்டானையும், அம்பாரி வைத்தேறிய மத, யானைகளும் பட்டத்தானைகளும், தென்பான ஒட்டகங்களும், படைதனில் அம்பாகப்பாயும் பரியணிகளையும், நாணயம்நான் பார்த்தேன், ஒப்பரி காணவும்போகுமோ பஞ்ச கலியாணியென்றதனுமம், குச்சுகட்டாணிமுத்துகள் தொங்கும் அதிசயமும்வேணதெல்லாங்கண்டேன், பொழுது வீணிலேபோ குதென்று வேளைபார்த்து தூணருகிலே பதுங்கினேன், அஷ்ட கோணத்திலுங்கண்ணைக் குறிப்புவைத்தேன். இங்கிதமந்திரமும், உருச்செய்து பொங்கமுடனே, சொக்குப்பொடி யெடுத்து சங் கையில்லாமற் கதம்பப்பொடியுடன் எங்குஞ்சூழக் கலந்திறைத் துவிட்டேன், சுகந்தசொக்குப்பொடியால் அவரவர்மிகுந்தமயக் கமுற்ருர்வேளையென்றே நகர்ந்துநகர்ந்து,நெருங்கி குதிரைமுகந் தனிற்சுழியும், சுத்தமும்பார்த்தேன், செகந்தனிற்கீர்த்தியொன் றும் பரியையெனநகத்தினுற்சொரிந்தனன், அகந்தெரியவெருண் டுவிழுந்துபுரண்டு, என்னையதுவேற்ருளென்றுகனைத்தது கூற்றுவ ன்போலே; மிரண்டிரண்டுமுளையும்பிடுங்கிற்று, வினையேனுக் கஷ் டமத்துச்சனியெனவே அறிந்தே யெழுந்திருந்தார் காப்பிரிகள், அந்நாடகர்வடுகர்கந்நாடகர்கள்,தூர்த்தரசபுத்திரர்கள் சாளுவர் சோனகர் குதிரைக்குத்தாணயத்தார், பார்த்திடவருகில்வந்தார்

நாலுதிக்கும் பார்த்தேனுயிரைக் காப்பாற்றிடவே,வேற்றேரிட மில்லாமல் அங்கேயொரு வெட்டுப்பள்ளத்திலிறங்கித் திட்டம தாகக், காத்திரட்சிக்க வேண்டும் என்றந்தக்கள்ளழகரையுமெந் தன்உள்ளத்தில்வைத்துப் பதுங்கிக்கொண்டேயிருந்தேன்,பருநா கப்பாம்புவந்துகடித்து வீம்புசெய்தே, மிதமில்லா நட்டுவக்காலி தேள்குளவி, மேனியெல்லாங் கொட்டிச்செய் யானுங் கடிக்கச் செல்லுமொரண்டையெரிக்கப்புட்டத்திலேசிற்றெறும்புங்கட்டெ றும்புமொக்கக்கடிக்க, இல்லையோஎன்கையில்மருந்,திதற்கெல்லா மெடுத்துண்டுசமாளித்தேன் திடத்துடனே, மத்தாப்புதீவட்டிக் ளைக்கொளுத்தியே வந்தவ ரெச்சந்திலும்புகுந்துபார்த்தார்,சற் றுந் தெரியாமல்பள்ளத்திலும், தானிருந்தேன் பதுங்கிநானிருந் தேன், துள்ளுகாளை வேட்டைநாயொன்று பள்ளத்தைமெள்ளச் சுற்றிக்குலைத்தது ளொள்ளுளொள்ளென்றே, கள்ளனகப்பட்டா னென்றே, அகமெத்தக்களித்தனர் பள்ளத்தைவளைத்தனரே,'ஆ யிரஞ்சிங்கத்துக்குள்ளேஒரானை அகப்பட்டாற்போலவே திகைத் திட்டுநான், பேயனைப்போலேநின்றேன், எல்லாரும்பிரண்டுதிர ண்டேயெந்த னருகில்வந்து தொங்காதகிலனென்பார் இந்தப் பொல்லாததுஷ்டன் தலையைரண்டாய்,வெட்டவேணுமென்பார், சங்கையில்லாமலிங்கேவந்தான் சாடுமென்பார் தொழுவிற்போடு மென்பார்,.மாறுமாறு பேட்டிசோத்தென்பார் வெள்ளைக்காரர் வாட்ஸேக்தீஸ்மேன் கிரேட்தீப்பென்பார், தாறுமாறுகப்பேசி ரெண்டுகையும் சண்டித்தேயிறுக் கட்டிக்கொண்டுவந்தார், அஜ ரத்நபாபுசாயபு பாதருடனறிக்கையிட்டாரவரை வெறுக்கவுண் டோ, திசைமுகன்விதியாலே நபாப்சாயபு சேதிக்கச்சொன்ன ரெந்தன் பாதிக்கரங்கால்.

## கோச்சகம்.

பொல்லாதகிங்கிலியர் போலிறுகக்கட்டியெங்கு
நில்லாமலாக்கினைக்காய் நெடுவீதிசெல்கையிலே
நல்லோர்பெரியோர்கள் நானிலத்திற்கண்டோர்கள்
எல்லாருமெந்தனைப்பார்த் தேசியும்பின்பேசுவரே.

## திபதை இ-ம், காம்போதி.

முகமாயக்காரனிவன்மந்திரத்தில் முடுக்கனென்பார்வெகு துடுக்கனென்பார் செகமாயங்களெல்லாமறிந்திடுஞ் சித்தனென் பார் இந்திரசித்தனென்பார், சுற்றுமதில்களைத்தாண்டும் இவன்

வெகு துண்டனென்பார் வல்லாளக்கண்டனென்பார், இத்தனைக் கட்டுந்தள்ளிவந்தளத்தனென்பார் திடச்சித்தனென்பார், வெகு தீரனென்பார் பக்கிரி வேஷத்துக்கு இவனேபாத்திரனென்பார் வெகுசூத்திரனென்பார், வேளைக்கேற்றஉருவம்எடுத்திடும் வேடனென்பார் குடி கேடனென்பார், நாளைக்கிருந்தாலிவனால் வரும் நஷ்ட மென்பர்ர் மிகுகஷ்டமென்பார், துஷ்டபுருடனென்பார், அகப்பட்டுக்கொண்டதுவே மிகவும் நல்ல தாச்சுதென்பார், கிலி போச்சுதென்பார், பார்த்தாலு நல்லவன்போலிருக்குறான் பாபமென்பா ரேதோசாபமென்பார், எத்தாப்போலவரவர்க்குத்தோன்றினமட்டும் ஏசினரேஎந்தனைப் பேசினரே, சனிபோ லோர்கைகாலைக், குறித்துத்தறித்தனரே என்னைவெறுத்தனரே, வினைவந்தூண்டதென்றால், எவரையும்விட்டுவிடுமோஒன்று மட்டுவிடுமோ·

## விருத்தம்.

பரிதிருடப்போய்க்கரங்கால்விடுத்துக் கோலூன்றிச்சென்னைப்பதியில்வந்தேன், குருகுலவெங்கட்டரங்கன் காலுக்குமரக்காலுங்கொடுத்தான்பின்னு, மரிபரவுந்திருக்கச்சூரமிர்தத்தியாகேசரைநீ யடுத்தாயானால், வருமறுத்த கைகாலு நினைத்ததெல்லாந்தருவரெனவந்திட்டேனே.

## வசனம்.

அகோவாரும் பிள்ளாய்நொண்டி உன்பூர்வோத்திரங்களெல்லாம் ஆதியோடந்தமாகநீசொல்லக்கேட்டு எங்களுக்கு அதிக சந்தோஷமாச்சுது. இப்பவும் அமிர்தத்தியாகேசரை வணங்கித் தோத்திரஞ் செய்தாயானால் உனக்குத்தறிப்பட்ட கைகால்கொடுப்பாரென்று சொல்லக்கேட்டு நொண்டியும் அதிகசந்தோஷப்பட்டு அமிர்தத்தியாகேசரைத் தோத்திரஞ்செய்கின்றவிதம் எப்படியென்றால்.

## தோத்திரவிருத்தம்.

திக்குவேறில்லைநீயே திருக்கச்சூரமிர்தத்தியாகா
மிக்கவேதறித்தகாலும் மெய்ப்படுகையுநீயே
இக்கணந்தருவாயென்ன விரங்கியேயளித்தார்தியாகர்
பக்குவமாகநொண்டி பாடிக்கொண்டாடினானே,

## வாழிவிருத்தம்.

சீர்வளர்மறையும்வாழி தென்தொண்டைநாடும்வாழி
ஏர்பசுமறையோர்வாழி இராசராசர்களும்வாழி
தேருறுந்திருக்கச்சூர்வாழ் ஜெயவமிர்தத்தியாகேசர்
பேர்வளர்மதுரைநொண்டிப் பெருந்தமிழ்வாழிவாழி.

நொண்டிநாடகம் — முற்றிற்று.

உ

சிவமயம்.

# திருக்கச்சூர் ஆலக்கோயில்

# திருவிளையாடல் கீர்த்தனை.

வெண்பா

மருந்திட்டான் றென்கச்சூர் வாழமுதத் தியாக
னிரந்திட்டா னென்று மெவ்வ—மறைந்திடவே
வெங்கட்ட ரங்கனெனும் வேந்தனுக் கேவிரைந்து
தங்கத்தை யேகொடுத்தான் தான்.

## இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

அதிசயமெண்ணென் றிருவிளையாடல்செய்
தருபத்தைந்தாந் திருவிளையாடல்
அமுர்தத்தியாகர்திருக் கச்சூரினிற்செய்த
தார்க்குஞ் சொல்ல வெளிதோ.

அநுபல்லவி.

இதமுடன் கலியாப்த வருஷம்நாலாயிரத்
தெண்ணூற்றுத் தொண்ணூற்று மூன்றின்மேற்செல்
மதிமகிழுமுசித பிரமாதீசவருடம்-நற்புரட்டாசி
மாதம் பதினெண்தேதி
திதியு மேகாதசி யாயிலியம்
திங்கள் தினமும் வாசி
துதிசித்தநாமயோகம் பவகரணமிடபதுய்ய
லக்கினத்திர வையிருநாழிகைக்கு. அதி

சரணங்கள்

க. இந்திரனயனமரர் முனிவரரடியவரெவ
ருநிதந்தொழப்பதுமநடம்புரி
யிணைத்தாளிணை பாதுகைமீதினிலே.
யிசையத்தொடுத்துக்கொண்டு
சுந்தரமரவுரியரவக் கச்சும்புலித்தோ
லுடையும்சிர மாலிகையும்பொன்னூலும்

தோன்றுமலே கல்லாடையாற்காலளவுஞ் சுற்
றியுடுத்திக்கொண்டு
விந்தைமான்மழுக்கபால மறைத்திருகை
வீசிக்கொண்டுபொற்றிரு
மேனிமீதில் வெண்ணீறுநிறை
யப்பூசிக்கொண்டு

சந்திரனதிமலர்கள் சூடிய
சடையுந்திருவேட்டியான் மூடிய
அந்தரங்கப்பத்தர்சிந்தையுங் களிக்க
அருள்வளர்ந்து கொழிக்க

யாவருமிக வுள்ள
மகிழ்ந்து விள்ள
புகழ்ந்து கொள்ள
உள்ள

அம்புவியினிலொரு தம்பிரானெனவரு
அருமைக்கொருமைக் குரைசெப்புவாரெவ
ரனவரதமுஞ்சிலே தனிலெழுதியனிலே. அதி

உ. மங்களகரமாயன்பன் வெங்கட்டரங்கன்
வந்திறங்குங்கச்சேரி வளவினேராய்
வந்துமதியென்னத் தடிமின்னக்ககத்திற்
சோளியொன்று வைத்துக்கொண்டுநின்று

எங்குமிருக்கும்பொருள் கச்சேரித்திண்ணையி
லிருந்துகொண்டன் பன்பிள்ளைசேஷாத்திரிப்பெயர்
இன்பச்செல்வப் பேரிட்டுக்குட்டியப்பா
எங்கேயிங்கேவரச் சொல்லென்று

இங்கிதமாகப்பேசவந்தோமென்றதைச்
சிலர்வந்துசொல்ல அவரை
இங்கழைமினென அவரிங்கே
வரட்டுமென்று சொல்லவல்ல

இங்குளதாரென்றவர் பாலிலேமந்திரி
துங்ககந்தவே ளெழுந்தேயிருந்

துங்களூரெதுவென வெங்கும்புகழ்திரு
வுங்களித்துநிறையுங் கனச்சென்னைஎன்ன

இங்குவந்ததிப் போது
காரிய மேது
என்று வாது
சொல் போது

உங்களூரில் செல்வங் தங்குந்தளியிற் சேமம்
உளதைப்பரிவுற்றுரை செப்புவதற்
குளமதுமிகமகிழ்வுடனிங்கே வந்தனென அதி

௩. உன்னிச்சொன்னசேமம் பொன்பொருளோதிரு
வுருவோதிருவாயுகந் தருள்வீரென்ன
உள்ளதிரண்டுமுண்டு ஒருவாரந்தனில்
உகந்துகாண்பீரென்ன

அன்னதிருக்கட்டு மமுதுகொள்வீரென்ன
அன்றுவேடனெச் சிலுண்டசெவ்வாயார்
ஆசையதாகவிப் போதுதான்மகிழ்ந்தமு
தருந்திவந்தோமென்ன

கன்னிச்சின்னபேதைக்குத்தேள் தீண்டினதற்கோர்
மருந்துமுண்டோவெனத் தருகிறேனென்றார்
கையிலுள்ளதோ பையிலுள்ளதோ
போய்க்கொண்டு வாரதுண்டோ

என்னவெவரும்பிரமிக்க வேடிக்கைகாட்ட
எல்லாம்வல்லசித்தன்வாடிக்கை வன்னிவேணுமென்றார்
பின்னொருவன்கொடுக்க வன்னக்கையாற்பிசைந்து
திண்ணையின்கீழெறிந்து சொன்னஞ்

சொல்லாம லெடுத்து
ஒருவன்கைக் கொடுத்து
மிதியடி தொடுத்து
கொள்போ தடுத்து

இன்னவேளைசாமி யெழுந்தருள்வதென்றால்
இதமுற்றதமதுபொற்றளியை இதமுடனடையாளம
புதுமையது குறித்த அதி

௪. நாலடிநடந்தது மாத்திரங்கேட்கக்கல்லாலடியின்கீழ்
நால்வர்க்குபதேசித்த நாதாந்தப்பொருள்வேதாந்தப்பொருள்
நாடியம்பரம்புகுந்தார்
சீலமுன்னீந்தொன்றைத் திருவிளக்கினிற்பார்த்துச்
செம்பொன்னளித்துச் சென்றதம்பிரானெங்கேயென்று
தீவட்டிவிராந்தலுடன் ஊரெங்குங்கூடிக்கூடித்
தேடித்தேடியிருந்தார்
மாலடியும்பிரமன் மாமுடியுங்காணாரைத்தேட
இப்படிக்கோயில்
மடைப்பள்ளியினிற் சத்தந்தொனித்துட்சென்றார்
மானிடவேடங்காட்டி மாலோங்காரச்சத்தமீறியேவேத
மடந்தைஒருத்திக் காவேசமீறியே
பூலோகக்கயிலை யாலயத்தலத்தில்
நாலுவீதியும்பதம் நடஞ்செய் அமுதத்தியாகனே

| | |
|---|---|
| நானென்று | விதிக்க |
| எவரும் | துதிக்க |
| மதுரங் | குதிக்க |
| சம் | மதிக்க |

ஆலமுண்டோன்பவனி ஆடக்காண்பீரென்றார்
அமுதத்தியாகனைச் சொர்ணத்தியாகனென்
றனைவருந்தொழச் சொர்ணமுதலியசிவன் அதி



# பட்டோலை அகவல்.



திருக்கலி யாப்தமாந் திவ்விய வருட, மிருக்குநன்ன லிலட்
சத்து முப்பத், தீராயிரத்தி லின்புறச் சென்ற, தீரா யிரத்தெண்
ணூற்றுத் தொண்ணூற்று, மூன்றின்மேற் செல்லு முக்கியமாகத்,
தோன்றிய பிரமா தீசத்தொல் வருடஞ், சித்திரை மாசஞ் செய்
பூர்வ பட்சம், வெற்றிசேர் சட்டி மிருகசீரிடத்தில், ஆரோணம்
ரிடபமாந்த்விஜம்வீற, சீரவரோணஞ் சித்திரைதன்னில், ஆதியாங்

காஞ்சி யதிசயக்கச்சூர், மாதவரெவரு மகிழ்மகோத் ஸவத்தில்,
அமையஞ்சனுட்சியகமகிழ்ந் தணையு, மமூர்தத்தியாக ரம்மன்தன்
னூடல், தீர்த்தமைமெச்சச் செய்தருள் கட்டளை, பார்த்தவரெவ
ரும்பரவுநித் தியமா, முத்ஸவம் பட்சவுத்ஸவமாத,வுத்ஸவ வருட
வுத்ஸவம்யாவும், கீர்த்திசேர் கெர்ப்பக் கிரகமண் டபமுதல்,நேர்
த்திப்பி ராகார நீடுகோபுரமுந், திருப்பணி முதலாச் செய்கயிங்
கரியம்,பெருக்கவே நடத்தும் பெருமையும் படிக்க, ஊர்திருக்க
ச்சியூருமப்பேடு,சீர்வளர் சீதச் சிறினம்பூ தூராம்,மேரைகள்நட
க்கு மேன்மையாஞ்சீமை,பேர்வளர்செங்கற் பட்டுகோ வளமும்,
மணிமங் கலங்கருங் குழிநான்கு சீமை, அணியென மகமை யாய்
நடக் கிறது, சென்னபட் டணத்தில் செழிக்குஞ்சா வடியிலும்,
பொன்னும் வெற்றிலைப் புகையிலைக் கிடங்கிலும்,கனமுள்ள கோ
யில் கம்பத்துக்கிராமம், மணமைநாங் குப்பம் மகிழ்கீழ காரணை
திங்கள்சேர் கங்கை தியாகரா யன்குப், பங்குணஆமைப் பாக்கங்
கிராமம், குடித்தன சுதந்தரங் கூடுமர்ச் சனைகள், திடத்துடன்
கொடுத்துச்சீர்நடத் துவது, திருவிழாத் தன்னில் செயமகோத்
ஸவத்துக், கொருமையாய் நடத்து முபயஞ் செய்வோர், சென்ன
பட்டணத்தில் செழிக்கு மநேகர்கள், உன்னதச் சாவடி யுயரவுஸ்
காரர்கள், பெத்தோற் கிடங்கார் பேர்சக லாத்துச், சித்திரக்
கிடங்கார் செயவரசு பத்தர், வெற்றிலைப் புகையிலை மென்கிடங்
குள்ளோர், கொத்துடன் திருக்கச் சூர்குடித் தனத்தார், ஏசெ
ண்டு கோயிலா ரிங்கித முள்ள, மாசென்ன பட்டணம் வாழுமுப்
பளத்தார், இப்பதி னொருநா ளினியவுத் ஸவங்கள், நற்புக ழூபய
நடத்திய மேன்மையும், உச்சித வஸ்திர மொளிபீ தாம்பரம்,
மெச்சிய முகமல் விதவித மான, பட்டுவஸ் திரங்கள் பலபல,வித
ங்கள், திட்டமாய் ரத்தின சித்ரகிரீ டங்கள், சூரிய பிறையும் சொ
ற்சந்த்ர பிறையும், ஆரமாஞ் சுட்டி அரசிலைத் தொங்கல், குப்பி
யிராக்கடி குச்சு சடைப்பூ, மற்றக் கர்ண வணிபத் திரமும், மின்
னிப முருகு விசித்திர நத்தும், உன்னதத் திலத மூன் கட்டுப்
பொட்டு, கதிரார் மகரக் கண்டிகைப் பதக்கமும், அதிசயச் சந்
திர ஆரஞ் சரப்பளி, அச்சுமார் பவழம் அணிவில்வ்மாலை, வச்
சிர மாலை மகிழ்முத்து மாலை, வங்கி யுபையமாம் பாஜி பந்தும்,
கங்கணம் பாட்டில் கைக்கட்டு வளையம், பன்மணிக் குண்டும் பவ
ழங்கள் மோதிரம், மின்னு நுண் ணிடைக்கு விளங்கொட் டியா

னம், தண்டைச் சிலம்பு தாளினிற் கொலுசு, கண்டிடப் பாடகங் காலாழி பீலி, இன்னமும் வேண்டு மினிதா பரணமு, மின்னிய தங்கத் தொட்டியும் பிரபையும், சித்திர பில்லை திண்டுக ளுடனே, பத்தியா யர்க்கிய பாத்தியஞ் செம்பொற், சந்தன வட்டில் தடுங் கா ளாஞ்சி, சுந்தரப் பன்னீர் சொம்புதாம் பாளம், கமழபிடேக் கலசங்கள் கெண்டி, கமலங்கள் சோதிப்ர காசமாய் மின்ன, தீப க்கால் தூபக்கால் திரிநேத்ர தீபம், மூாபுகழ் பெருசதுர் வத்திர தீபம், பூரண கும்பங்கற் பூரம்பொற் றீபம், காரண மானபஞ் சாலத்தி கமலம், திருநீற்று மடலும் செழிக்குங்கண் ணுடி, மருக் கொடையால வட்டம் வெண் சாமரை, இருபுறந் துஜங்க ளீட் டிபல் லயங்கள், வருமப ரேக்கு மயிற்குஞ்சம் விசிறி, வெள்ளித் தடிகள் விளங்குசாங் குகளும், வில்லு வாத்தியங்கள் விளங்கு தோற் கருவி, கஞ்சக் கருவி கதிர் துளைக் கருவி, மிஞ்சிய நரப்பு மிடற்றுக் கருவி, பஞ்சக் கருவி பதினெண்வாத் தியமுங், குஞ் சரத் துடனே குடை கொடிச் சிலை, மகர தோரணங் குமாரபா ணங்கள், மகிழ்வுடன் பாண வகைவகை மிகவும், தீவட்டில் வகை கள் சித்திரக் கட்டில், மூவளர் சப்ர கோடிமஞ் சங்கள், திவ்விய திறப்புத் திரையும் படிக்கமும், யிவ்வகை வேண்டிய தெல்லா முத வி, நற்புண்ய வாசிலாயன சூத்திரன், மற்புயன் கவுதம மகாரிஷி கோத்திரன், வெண்டலூர்க் கதிபன் வெங்கடாத்திரிசொல், மண் டலா திபனு மகிழுஞ்சீர்க் கருணன், வெங்கடரங்கன் மிகப்பணிந் தேத்தி, திங்களு மிரவி திகழ்பாருள் ளளவும், தருமமே நடத் துந் தயாளமு மன்பும், ஒருமையு மிவனுள் ளுறுதியைப் போல, ஒருவற்கு முளதோ வுகந்துநின் பிள்ளை, அருமை பெருமை யறி ந்தா தரிக்கும், பெருமை சேர் சேஷாத் திரியெனு மண்ணல், வருமனம் நினைத்த வரமெலாமுதவி, தானிக ருக்கும்பரி சாரகர் தமக்கு, மாநாலு சாதி மனிதர் யாரெனினும், நின்னையு மெனையு நினைப்பவ ரெனினும், சன்னிதானத்தில் தான்வரு வோர்க்கும், உபையகா ரருக்கும் ஒருமையன் பருக்கும், அபையமென் றன் பா யடுத்தவர் தமக்கும், வேண்டிய வரங்கள் மிகமகிழ்ந் தருளி, ஆண்டவ ரான அமுர்தத்தியாகர், பரவு மெவ் வுயிர்க்கும் பட்ச மாய், அரனஞ்ச ளுட்சி அருள்செய் வார்களே.

ஆச்

# திருக்கச்சூர் ஆலக்கோயில்

## வழிநடைப் பதம்.

அன்னமேநாமுறவாடி - தியாகர்
அதிசயம்பார்க்கலாம் நீவாடி - அன்

அன்னவயல்சூழ் திருக்கச்சூரில்
அற்புதமா மஞ்சனாட்சி மீனாட்சி
அந்தரிபாகரமூர்தத் தியாகேசர்
ஆடும் நடனம் பார்ப்போம்
நீடும்விதனந் தீர்ப்போம். - அன்

நாவலர்வாழ்சென்னை மாநகரம்விட்டு
நண்ணிவந்தோம் சைதாப்பேட்டை இந்த
நதியிலமுதுண்டு நடக்கலாம்
நற்பரங்கிமலைப்பாட்டை

நீதமீனம்பாக்கத்தின் சாவடி
யானபல்லாபுரம் நாட்டை
தாவிழியணங்கே வெய்யலாச்சுது
இளைப்புமிக வாச்சுது

கட்டிக்கரும்பே தோப்பு
எட்டிப்பிடிப்போம் தாப்பு

அட்டிசெய்யாமலே நடந்திடு
அகத்தினிலன்பு பதிந்திடு
கஷ்டமிருப்பனதை மறந்திடு
கவலையை ஒட்டவே சிறந்திடு. - அன்னமே

பொந்திலியன் சத்திரந் தன்னைவிட்டோம்
கடப்பேரிச்சாவடியைப் பாரடி
பூங்கொடிமாதே புனிதமாமலர்ச்சீரடி
சிந்தைமகிழ்கூடுவாஞ்சேரி

சென்னித்திருக்குளஞ் சூழ்ந்திடும் ஊரடி
நந்திபுரம் சௌந்தரநாயகி
நந்திஸ்வரர்பாரடி

சண்பகமே காட்டாங்குளத்தூர் தாணிது
தேனேயுனக்கிணையாரடி ஆயாசம்
பாராதே இந்நேரம் அதுகோபுரம்
இதுதானடி திருக்கச்சூர்—நல்ல

பரிமளச்சுருள் பாக்கிலே யொடு
தருவிய சுண்ணாம்பொடு தொடு
மருவினைவருமென்பதை விடு
நறுமலர்க்கொறை சூடிடு. அன்னமே

முங்கையரேநாம் மோர்க்குளம் தாண்டி
மருந்தீசரூரிதை வந்தோம்—ஓ
மாதேமாமிலத்தோ ரேருந்திரளுடன்
மாட்சியாகவே துடர்ந்தோம்

திங்களைப்போலவே சூளிகைநிரையும்
செல்வர்வாழும் வீதியுங்கடந்தோம்
இச்செகமெங்கும் கண்டிலாப்பூப்பந்தலில்
சிங்காரமுற்றானந்தமடைந்தோம்—ஓ

சேல்விழிமாதே புத்தியீனர்
செய்வார்கள்தீதே கூட்டத்தினில்
சேரவொண்ணாதே அகமதில்
சோம்பல்வையாதே நல்ல

சேல்விழி மாதர்க ளாட்டும்
தாழ்விலாப் பக்தர்கள் பாட்டும்
ஊழ்வினை யாவையு மோட்டும்
வாழ்வுற நல்வழி காட்டும். அன்னமே

சங்கத்தொனி மத்தளந் தாளம் தப்பட்டை
டவல் டங்காபேரி முழங்குது மிகு
சதுர் வேதபாரரா யணங்களோது நற்
சாஸ்திரிகள் கும்பு காணுது எங்குமில்லா

அவிட்டுகள் விண்ணேகுது
எண்ணிலாவிண் மீன்கள்தோணுது இதோ
ஈசன்மயேசன் தியாகர்நடனஞ்செய்
யேகிவரத்துன்ப மோடுதே—ஓ

இன்பமுள்ளாளே ஏற்பவர்க்கு
ஈகையுள்ளாளே கிள்ளைமொழி
யொக்குஞ் சொல்லாளே நமதிட
நிற்குமின்னாளே—ஓ

அன்னமே நடனமுங் காணடி
யின்னதீரப்பதம் பாடி
முன்னமே திருவங் தானடி
சொர்ணமே யூர்வழி நேடி. அன்னமே

# திருக்கச்சூர் ஆலக்கோயில்

## நிந்தாஸ்துதி

### கண்ணிகள் இராகம்-காம்போதி-தாளம்-ரூபகம்.

தேவரீரென்பிழை பொறுத்தாளாவிடி லுமது
சேதிதெரியச்சொல்லுவேன்—சுவாமி

க. நாவலோர்துதிகச்சூ ரமுதத்தியாகராஜரே
நாடெங்குஞ்சொல்லச்சபையிலாடல்கொண்டவரல்லரே

உ. பித்தனென்றசொல்லுமிருக்கச் சிறுத்தொண்டன்
பிள்ளைக்கறியைத்தின்று விடுத்தீர்தானே.

ந. நித்தியனுனென்றும் புராதனனுனென்று
நிசமாய்கையினில் மழுவெடுத்தீர். [துப்

ச. என்னபுத்திகொண்டோவொரு பெண்ணைச்சடையில் வைத்
பின்னை யொருத்திக்கிடங்கொடுத்தீர்.

ரு. ஒருத்திபிள்ளைபெற்றிட மருத்துவம்பார்த்தன்று
பிழைப்புவேறில்லையென்று அடுத்தீர்.

சு. காட்டில்புலித்தோ லிடையதனிலுடுத்தீர் வண்ணான்
பெண்ணின்மேலாசையைத் தொடுத்தீர்.

எ. விறகுவிற்றும்மண்ணைச்சுமந்தும் பிட்டைத்தின்றும்
விபுதர்க்காக நஞ்சையுண்டதும்.

அ. கானக்குறவர்வீட்டிலொரு பிள்ளைக்குப்பெண்கொண்டொ
கொம்பனைவழி காக்கவைத்ததும் [ரு

சு. உந்திக்குறவரனே ரிருவருந்தேடியுங் காணும
லுருவில்லாததே யொளித்துக்கொண்டதும்.

க0. வெகுதிறமோவேடனெச்சில்தின்றும்பூவில்
வேதன்சிரத்திற்பலி யேற்கக்கைகண்டதும்.

கக. வெளித்தில்லைவீடாய்க்கொண்டு நின்றதும்நீர்
சிரித்துமுப்புர மெரித்தேனென்றதும்.

கஉ. எருதன்றிவேறில்லை வில்லடிபிரம்படி
யிருக்கின்றதற்குமுன் றேகமிருந்தபெருமையை.

கந. சுந்தரருக்கிரந்திட்ட பெருவாழ்க்கைபேரான
துமக்குள்ளயோகம்.

கச. தேவருருவெங்கு மானைத்தோல்வீடுங்
திருமயானமுரகப்பணி யெலும்பனேகம்.

கரு. வருமருந்திடுவது மிளமதியணிவதுமென்ன
வழுத்துமடியவர்மேல் மோகம்.

கசு. சுற்றும்வளர்சடைக்கணிவது நாகம் மெய்
வழங்கும் விபூதியாகம்.

கஎ. வாசவனயன்திருமாலுக்குன் றேவிக்கும்
வ ந்தருங்கச்சூரில் வாசரேமிக்க.

கஅ. தேசம்புகழ்ந்திடுமவிழ்தகிரிக்கூர்ம
தீர்த்தம்படைத்த உல்லாசரே.

ககூ. வேதம்பேசுந் தயாபரி ஆனந்தத்தாண்டவி
பெண்ணஞ்சனுட்சிதன் நேசரே.

உ0. ஜெகதீசரேதிரிபுர தாசன்றுதிகொண்டு
இணையடிதருந்தி யாகராசரே.

உக. வெண்டையரங்கன்பணியும் பிரகாசரே ஐயா
விருதயத்தில்வளரும் விலாசரே. தேவரீர்



## பவனி பதம்.

### கண்ணிகள்-இ-ம்-உசேனி, அடதாளம்.

க. பவனியாடுவீர் ஹர ஹர
பவனியாடுவீர் உமையுடன் சிவானந்த
சிவஞானி அஞ்சனுட்சி மனோகரே
திருக்கச்சூரமுதத்தியாகரே. பவனி

உ. தந்திமுகனுடன் சண்முக வேலவன்
சந்திரசேகரர்
நந்திகேஸ்வரர் சுந்தரர் மூவர்கள் போற்ற
நல்ல சொர்னத் தொட்டில்மீதில் பவனி

ங. அற்புதமாய் நந்தி மத்தளம்போடவே
அருகில் நாரதர் கின்னரர்பாடவே
கற்பனையாய்ப் பிரமதாளங்கள் போடவே
காலினிற்சொர்னச் சிலம்பொலிகூடவே பவனி

ச கந்த பரிமள வாடைமருமலர்
கெம்புநவரத்தின மாணிக்கம்பச்சையும்
அந்தமதாக அழுத்திய தொட்டிலில்
அஞ்சனுட்சியுமை பாகமதாகவே பவனி

ரு. முத்துமெகம்பு வர்னச் சொர்னச்சரமுடன்
முல்லைஇருவாட்சி செண்பகமாலையும்
பத்தரைமாற்றுச் சரிகைப்பொன் போர்வையும்
பரமன் அணிந்து சொர்ணத் தொட்டில்மீதில் பவனி

சு. சிம்மாசனத்துடன் சொர்ணத் தொட்டில்மீதில்
செங்கழுநீர்ப் புஷ்பம் சாத்துபடியில்
உமாபதிவந்து வாசமதாகவே
உச்சிதமாய்ச் சொர்னரத்தினக் கணைமீதில் பவனி

எ. சத்திமறையோர்கள் அற்புதமாகவே
சாத்துபடியும் குருக்கள்மார் செய்தபின்
அதிசயமாகத் தீபாராதனைபண்ண
ஆனந்தமாய்ச்சிவன் பொற்கணை மீதினிற் பவனி

அ. ஆகமவேத மறையோர்க ளோதவே
ஆலாத்திதட்டுக் குடமேந்திப் போற்றவே
யோகமதாய் சுந்தரர் முறையோதவே
உச்சிதமாகியசொர்னத் தொட்டில்மீதில் பவனி

கூ. மயிற்குஞ்சம் ஆலவட்டம் வெண்சாமரம்
மருவுவெட்டிவேர் விசிறி பொற்குடை
அயில்புழுகுபன்னீருடன் சவ்வாது
அற்புதமாய்ச்சொர்னத்தொட்டில்கணைமீதில் பவனி

க0. வல்லையமீட்டி குமாரவர்ணக் கொடி
வரிசை டாலுகள் வச்சிர வெள்ளித்தடி
நல்லானை மீதில்பட்டு நிசாருடன்
நாததொனியுடன் சொர்னக்கணைமீதில் பவனி

கக. மகரதோரணத் தீவட்டிலாயிரம்
மத்தள தாளங்கள் மாதரிருபுறம்
தகதிகென்னவே நாட்டியங்களாடவும்
சர்வவாத்தியமுடன்பொற்கணைமீதினில் பவனி

கஉ. பேரிடமாரஞ் சின்னம் கைமணிதுந்துபி
புள்ளாங்குழல் முகவீணை
ஏர்கடி பூரிகை துத்தாரிகை தப்பட்டை
பொங்கமாய்ப் பொற்றொட்டில் மீதினிற் பவனி

கங. சங்கீதவீணையில் ரம்பைகளாடவே
சத்ததாளமுடன்கைம்மணிபோடவே
இங்கிதமாய்ச் செனர்கட்டியங் கூறவே
யின்பமாயம்பாளுடன் சொர்னத் தொட்டிலில் பவனி

கச. வாணவெடிகள் மத்தாப்பு புருசுகள்
வாடையிலனேகம் புஷ்பமாரிபெய்ய
நாணயமாகவே அஞ்சனாட்சியுடன்
நற்சொர்னத்தொட்டிலில் ரத்தினக்கணைமீதில் பவனி

கரு. மெய்யினில் மதாணிகளாடவே
மின்னுங்குழையினிற் குண்டலமாடவே
கையினிலேந்திய மான்மழுவாட
கனசபையில் கங்கைதிங்களுமாடவே பவனி

கசா. அஷ்டநவவீரர் துவாரபாலகர்
அருங்கணநாதர் சத்தரிஷியுடன்
தெக்ஷணாமூர்த்தி வயிரவநாதரும்
சிவசிவாவென்றுபோற்றித் தெரிசிக்க பவனி

கஎ. மாலயனண்டர் முனிவர் பெரியோர்கள்
மகாதேவாதிகள் வானவர் போற்றவே
தாலமீரேழு புவனசெனங்களும்
சங்கரன் சேவையைக்காணக் கண்காட்சியாய் பவனி

கஅ. வேதமறையோர் துரைராஜர் புண்ணியர்
விளங்கிவாழு மகாசென வர்த்தகர்
ஆதரவாய்வந்து உந்தன்றலத்தில்
அனைவோரும்போற்றஅருள்செய்யும் அற்புத பவனி

ககூ. பாரினிற்கீர்த்தி பெறுந்தருமகர்த்தர்கள்
பாக்கியமுடனுந்தன் பாதமேபூசிக்க
சீரில்மிகுந்து அனுதினம்வாழ்க
சிவனே வரந்தருஞ் செம்பொற்கணை மீதில் பவனி

உ௦ அரிதிருஅயன் சந்திரர்சூரியர்
அறுபத்துமூவர் சுந்தரர் போற்றிடவே
பரிவுடன்பதினெட்டு பவனியும்
பரமனேசொர்னத் தொட்டிலின்மீதினிற் பவனி

உக. அம்பலந்தன்னிலே எல்லம்மை மாரி
அழகம்மை காளியுமண்ணமார் போற்றவே
செம்பொற்கணைமீதி லஞ்சனாட்சியுடன்
தியாகரே சொர்னத்தொட்டிலின் மீதில் பவனி

உஉ. சுந்தரர்க்கன்னமிரந்திட்ட கச்சூரில்
சொர்னவருளஞ்சனாட்சி மணாளர்
மைந்தன்சமரபுரித்தமிழ்க் கன்பருள்
மஹாதேவரே அமுதத்தியாகராஜரே பவனி

## விருத்தம்

வில்வத் தொடும்பொற் கொன்றையணி வேணிப் பெருமான் கச்சிநகர்ச், செல்வப்பெருமான் சிவபெருமான் றியாகப்பெரு மான் றிருவழகைக், கல்வைப்புடைய மனங்களிக்கக் கண்கள் களிக்க கண்டு நின்றே, னில்வைப்புடைய னம்மானா னென்ன தவந்தான் செய்தேனே.

## சுவாமி சோபனம்.

க. சோபனம்பச்சைவாசருக்குசோபனம் பிச்சைநேசருக்கு
சோபனம் கச்சபேசருக்குசோபனம் நித்திய சோபனம்.

உ. சோபனமிரந்திட்ட வர்க்குசோபனம் விருந்திட்டவர்க்கு
சோபனம்மருந்திட்டவர்க்குசோபனம் நித்திய சோபனம்.

ந. சோபனங் காலகாலருக்குசோபனம் வடவாலருக்கு
சோபனமிர சாலருக்குசோபனம் நித்திய சோபனம்.

ச. சோபனஞ் சாமகண்டருக்குசோபனஞ்சோம துண்டருக்கு
சோபனங் கூர்மகுண்டருக்குசோபனம் நித்திய சோபனம்.

ரு. சோபனமுருவெயிலாருக்குசோபனமொரு தாயிலாருக்கு
சோபனமாலக்கோயிலாருக்குசோபனம் நித்திய சோபனம்.

## அம்மன் சோபனம்.

க. சோபனமறை சாட்சியருக்கு சோபனங்கச்சூராட்சியருக்கு
சோபனமுஞ்சனட்சியருக்கு சோபனம் நித்தியசோபனம்.

உ. சோபனஞ்சோமசுந்தரிக்கு. சோபனம்வாம தந்தரிக்கு
சோபனஞ்சாமகந்தரிக்கு சோபனம் நித்தியசோபனம்.

ந. சோபனங்கிருபைவாரிதிக்கு சோபனமரிசோதரிக்கு
சோபனங்கச்சூர்பார்வதிக்கு சோபனம் நித்திய சோபனம்.

## சுவாமி எச்சரிக்கை.

## இராகம் - சவுராஷ்டகம்.

க. ஈசாநடராசாகைலாசாபரமேசா
தேசாகச்ச புரிவாழ்கச்ச பேசா எச்சரிக்கை.

உ. வேதா மலர்ப் பாதா நவ நீதா குழைக்காதா
தாதா கச்ச புரிவாழ்தியாக நாதா எச்சரிக்கை.

ந. சடையாயதலுடையாய்கொன்றைத் தொடையாய்மழுப் [படையாய்
கொடையாய்கச்ச புரிமேவிய விடையாய் எச்சரிக்கை,

ச. தீராவலங்காராமமூ வீராகொன்றைத்தாரா
நிராச்சனை யோய்கச்சூ ரூரா எச்சரிக்கை.

ரு. விண்ணோரறியொண்ணுவழல் வண்ணகனற்கண்ணு
பண்ணூர்கச்சபுரிவாழெங்க ளண்ணு எச்சரிக்கை.

சு. நாலாமறைமேலாகிய காலாபாலீலா
சீலாவநுகூலாவீர சாலா எச்சரிக்கை.

எ. மாயாமறைவாயாவதி தூயாவுமைநேயா
சேயாகச்சபுரிவாழ்தியாக ராயா எச்சரிக்கை.

## அம்மன் எச்சரிக்கை

க. மாட்சிமறைசாட்சிபணி பூட்சியரன்காட்சி
ஆட்சிகச்சபுரிவாழஞ்ச ணுட்சி எச்சரிக்கை.

உ. நாயேன்பிணிநீயேதவிர்த் தாயேயருள்வாயே
சேயேமகிழ்தாயேகச்சி யாயே எச்சரிக்கை.

ந. நீலிதிரிசூலிகுண சாலிசிரமாலி
நூலிதண்டைக்காலிகிருபை வாலி எச்சரிக்கை.

ச. வீரிகவுமாரியலங் காரிகொன்றைத்தாரி
நாரிகச்சபுரிவாழ்கிருபை வாரி எச்சரிக்கை.

ரு. அருவேதிருவுருவேயரு வுருவேயறிவுருவே
மருவேகச்சபுரிவாழெங்கள் திருவே எச்சரிக்கை.

### வாழி.

ஆரணநெறிகள்வாழியமுதத்தியாகேசர்வாழி
பூரணியஞ்சணுட்சிபுகழுடனோங்கிவாழி
சீரணிபணியும்வாழிதேன்சுனைபலவும்வாழி
தாரணிவாழிகச்சூர்தருமஞ்செய்வோரும்வாழி.

## சுவாமி மங்களம்

க. கச்சபம்பூசித்தவர்க்கு கச்சூர்நிவாசருக்கு
கச்சபராமீசருக்கு மங்களம் சுபமங்களம்.

உ. ஆலமணிகண்டருக்கு ஆலநிழல் கண்டவர்க்கு
ஆலக்கோயிலண்டருக்கு மங்களம் சுபமங்களம்.

ந. மலையைவில்லாய் வளைத்தவர்க்கு மலயமுனிக்களித்தவர்க்கு
மலைமருந்தரானவர்க்கு மங்களம் சுபமங்களம்.

ச. நிலவணியும்வேணியர்க்கு நிலங்கொள்பணி பூணியர்க்கு
நிலவுகச்சூர்காணியர்க்கு மங்களம் சுபமங்களம்.

ரு. கந்தனைச்சிரம்வைத்தவர்க்கு கந்தனைக்கரம்வைத்தவர்க்கு
கந்தனையருள்வித்தகர்க்கு மங்களம் சுபமங்களம்.

சு. அமுதிரந்துபடைத்தவர்க்கு அமுதம்விண்ணோர்க்கீந்தவர்க்கு
அமுதத்தியாகேசருக்கு மங்களம் சுபமங்களம்.



## அம்மன் மங்களம்

க. அஞ்சலென்றேயருள்பவட்கு அஞ்சநடையாள்தனக்கு
அஞ்சனாட்சியம்மனுக்கு மங்களம் செயமங்களம்.

உ. மையாருங் குழலியட்கு மையார்கண்ணி யம்மனுக்கு
கையாருங்கிளியவட்கு மங்களம் ஜெயமங்களம்.

ங. பூவைமுடிக்கின்றவட்கு பூவைமொழியாளவட்கு
பூவைவண்ணன் சோதரிக்கு மங்களம் செயமங்களம்.

ச. போதகத்தை யீன்றவட்கு போதமெனக் கீபவட்கு
போதன்பணி நாயகிக்கு மங்களம் செயமங்களம்.

## தட்டுச்சந்தி மங்களம்



### இராகம் பைரவி.

க. மங்களங் கருக்கடியில் வாழ்வுபெறு கணபதிக்கு
மங்களம் பாலசுப்பிரமண்ணியர்தமக்கு
ஜெயமங்களம் நித்திய சுபமங்களம்

உ. மங்களந் திருக்கச்சூர் வாழமுதத் தியாகருக்கு
மங்கள முமை யஞ்சனாட்சி தனக்கு
ஜெயமங்களம் நித்திய சுபமங்களம்

ங. மங்களங் கூர்மமென வந்தநரகரிதனக்கு
மங்கள மலரயன் றேவாதி யருக்கு
ஜெயமங்களம் நித்திய சுபமங்களம்




திருக்கச்சூர் ஆலக்கோயில் தோத்திரமஞ்சரி
முற்றுப்பெற்றது.